# கல்கி

KALKI
12.10.97
ரூ. 4.00

## "98-ல் திரும்பி வருவேன்!"

— தோள் துவண்ட ஸ்ரீநாத் தயாராகிறார்



# கல்கி

26.10.97 இதழ்

## சிரிப்புச் சிறப்பிதழ்...

## ஒன், டூ, த்ரீ...

நட்சத்திர
எழுத்தாளர்கள்
எழுதும்
கதைகள்



# நிலா வேட்டை

பா. ராகவன் எழுதும் பரபரப்பான தொடர்கதை

இன்னும் புதுப்புது விஷயங்களுடன்!

அதிக பக்கங்கள்; அதே விலை!

# ஸ்ரீஹரிகோட்டாவிலிருந்து ஒரு நேரடி ரிப்போர்ட்

**ஸ்ரீஹரிகோட்டா விலிருந்து 29.9.97 அன்று காலை ஐ.ஆர்.எஸ். 1 டி செயற்கைக்கோள் ஏவப்பட்ட போது அங்கு நிலவிய டென்ஷனான சூழ்நிலை குறித்து நமது நிருபரின் நேரடி ரிப்போர்ட்.**

# அந்த பதினெட்டு நிமிடங்கள்...

'தடா'வைத் தாண்டி சூளூர்பேட்டைக்கு அப்புறம் ஒரு இடதுபுற டர்ன். இரண்டு பக்கமும் ஏரி. நடுவே படுத்துக் கிடக்கும் பாம்பு போல தார் ரோடு. ஈ, காக்காய் நடமாட்டம் கூட இல்லை.

ரோடு முடிகிற இடத்தில் ISRO என்ற இந்திய விண்வெளி ஆராய்ச்சிக் கழகத்தின் வளாகம் ஆரம்பமாகிறது.

ஏற்கெனவே பாதுகாக்கப் பட்ட பகுதி. போதாக்குறைக்கு பிரதமர் விஜயம் வேறு. கெடு பிடிக்குக் கேட்பானேன்?

ஆந்திர பத்திரிகையாளர்கள் வந்த இரண்டு பஸ்; சென்னை யிலிருந்து இரண்டு பஸ். எண்ணி லடங்கா கார்கள் (உபயம் : பல் வேறு டீவி சானல்களின் பிரதி நிதிகள்) என்று நானூற்றுச் சொச் சம் பேர் குழுமி விட்டார்கள்.

வளாகம் முழுக்க, கட் டடங்களின் மேலே வானை உயர்ந்து பார்க்கும் மனிதத் தலைகள்.

ராக்கெட் புறப்படுவதை எவ்வளவு அருகில் இருந்து பார்க்க முடியும்? ஆர்வம் பொங்க ஓர் அதிகாரியைக் கேட்டபோது, குண்டைத் தூக்கிப் போட்டார்.

"ராக்கெட் புறப்படும் தளத்திலிருந்து சுமார் ஏழு கி.மீ. தொலைவில் 'ஜீரோ ஸோன்' என்கிற மையம் உள்ளது. அங்கேதான் எல்லா சூட்சமங்களும் கொண்ட கட்டுப்பாட்டு மையம். நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து வந்திருக்கும் நானூறு விஞ்ஞானிகளும் அங்கேதான் அமர்ந்து கண்காணித்துக் கொண்டிருப்பார்கள். அங்கிருக்கும் பிரத்தியேகக் கண்ணாடிக் கூண்டுக்குள்ளிருந்து..."

"ஓ! அத்தனை தூரத்திலிருந்துதான் நாங்கள் பார்க்க முடியுமா?"

"ஸாரி சார்! அது பிரதமர், மற்றும் பிற வி.ஐ.பி.களுக்கான இடம்."

"ஓ! அதற்கு அடுத்த பாக்ஸ்தான் பிரஸ்ஸா?"

"ரொம்ப அவசரப்படுகிறீர்களே! அந்த ஜீரோ ஸோனி லிருந்து அதிகமில்லை. மூணே கிலோ மீட்டரில் பிரம்ம பிர காஷ் ஆடிடோரியம் என்று ஓர் அரங்கம். அங்கேதான் நீங் கள் ராக்கெட் ஏவப்படுவதைப் பார்க்க ஏற்பாடு செய் யப்பட்டுள்ளது!"

"ஆடிடோரியத்துக்குள்ளே அமர்ந்து, ராக்கெட்டை எப்படி சார் பார்க்க முடியும்?"

"டோன்ட் ஒர்ரி! உங்களுக்காகவே குளோஸ்டு சர்க்யூட் டீ.வி. வைத்திருக் கிறோமே!"

"அட! சரிதான் போங்க சார்! இதுக்கு ஏன் ஸ்ரீஹரி கோட்டா வரை வர ணும்! எங்க வீட்டு சோபா வுல சாய்ந்து உட்கார்ந்துக் கிட்டு, டீ.வி.யிலே பார்த்திருப்போமே!"

"இதுக்குப் போய் அலுத்துக்கிட்டா எப்படி? டெல்லியில இருந்து வந்திருக்கிற பிரதமர் கூட நேர்ல பார்க்க முடியாதே!"

"அப்படியா!" - ஓர் அற்ப திருப்தி.

அரங்கத்தின் மொட்டை மாடியிலிருந்து, புகைப்படக் காரர்கள், கேமராமேன்கள் படம் எடுக்கலாம் என்றார்கள்.

அங்கே போய், 360 டிகிரி தலையைச் சுழற்றிப் பார்த்தால், பச்சை மரங்கள் மற்றும் மரங்கள் மட்டுமே!

செயற்கைக் கோளைச் சுமந்தபடி ஒரு ராக்கெட் ஜூட் விடத் தயாராய் இருப்பதற்கான எந்தவித முகாந்திரமும் இல்லை. அது மட்டுமில்லை. மொட்டை மாடியில் நின்று கொண்டு, எந்தத் திசையில் பார்க்க வேண்டும் என்ற குழப்பம் வேறு.

"இதோ! அம்புக்குறி போட்டிருக்கே! கவனிக்கலையா? ஒரு போலீஸ் அடையாளம் காட்ட, அத்தனை கேமராக்களும் அம்புக் குறியிட்ட திசையில் திரும்பி, ராக்கெட்டை சுடத் தயாராய் நின்றன.

அரங்கினுள்ளே டெலிவிஷன் பெட்டி மீது ஒரு கடிகாரம்

டிக்கிக் கொண்டிருந்தது. டெலிவிஷனில், ராக்கெட்டின் முழு உருவம், பார்ட் பை பார்ட் ஆக குளோஸ் அப், கட்டுப்பாட்டு அறை என்று மாறி மாறி வந்து கொண்டிருந்தது.

"ஒரு விஷயம் தெரியுமா? இன்றைக்கு ஏதாவது எதிர் பாராத தடங்கல் ஏற்பட்டு, பத்தே கால் மணி முதல் பத்தரைக்குள்ளாக ராக்கெட்டை ஏவ முடியாமல் போனால், 'மறுபடி கவுண்ட் டவுன் எண்ண ஆரம்பித்து நாளை இதே நேரத்தில்தான் மேலே செலுத்த முடியுமாம்."

"நீ உன் வாயை வெச்சிக்கிட்டு, அபசகுனமா ஏதும் சொல்லாதே! எல்லாம் நல்லபடியா முடியணும்."

அதற்குள் கடிகாரத்தில் 50... 49... 48... நேரம் நழுவிக் கொண்டே இருந்தது.

டெலிவிஷனில் ராக்கெட்டின் முழுத் தோற்றம்.

34... 33... 32...

ஹாலே அமைதியாய் இருந்தது. உள்ளூர அலைவருக்கும் டென்ஷன். நமக்கே இப்படி என்றால், சம்பந்தப்பட்ட விஞ்ஞானிகளுக்கு...?

18... 17... 16...

"பத்திரிகை நண்பர்களே! இந்திய வரலாற்றில் ஒரு புதிய சரித்திரம் இன்னும் சில விநாடிகளில் எழுதப்படவுள்ளது. கண்டு மகிழத் தயார்தானே?"

10... 9... 8... 7...

"நம்மையும் அறியாமல், உடம்பு இருக்கையின் நுனிக்கு நகருகிறது.

6.... 5.... 4.... 3...

டென்ஷனின் உச்சகட்டம்.

2... 1... பூஜ்ஜியம் கடிகாரத்தில் பளிச்சிடும் அதே கணம் ராக்கெட்டின் அடிப்பகுதியில் பட்டாசுத் திரியாய் நெருப்புப் பற்றுகிறது.

தட... தட... என்று அந்தப் பிராந்தியத்தையே அதிரச் செய்யும் சப்தம் ஏற்படுத்தியபடி, ராக்கெட் புறப்படுகிறது.

அரங்கமே கூடி கைதட்டி ஆர்ப்பரிக்கிறது.

எங்கிருந்தோ 'பாரத் மாதாகீ...' என்று குரல் எழும்ப... அரங்கமே 'ஜே!' சொல்கிறது. 'வந்தே மாதரம்' என்று இன்னொரு மூலையிலிருந்து ஒலிக்க, நிஜமாகவே உடல் புல்லரிக்கிறது.

டெலிவிஷன் திரையில், கட்டுப்பாட்டு அறை காட்டப்படுகிறது. விஞ்ஞானிகள் முகத்தில் நிம்மதி! பிரதமர், இந்த மாபெரும் சாதனை புரிந்த இந்திய விஞ்ஞானிகளின் குழுவுக்குத் தலைமை ஏற்றுள்ள கஸ்தூரிரங்கனைப் பார்த்து சந்தோஷமாய்ப் புன்னகை செய்கிறார்.

புடைவைத் தலைப்பை முக்காடாய் போட்டு அமர்ந்திருக்கும் தமிழக கவர்னர் பாத்திமா பீவி முகத்தில் சந்தோஷம்.

ஆனாலும் அடுத்த பதினெட்டு நிமிடங்களுக்கு சஸ்பென்ஸ் நீடித்தது.

டெலிவிஷன் திரையில் ராக்கெட் செல்ல வேண்டிய பாதை ஆரஞ்சு நிறத்தில் ஒளிர, அதில் ராக்கெட் விண்ணில் சென்று கொண்டிருப்பது பச்சைப் புள்ளியாய் நகர்கிறது.

'வீடு வரை உறவு, வீதி வரை மனைவி, காடு வரை பிள்ளை, கடைசி வரை யாரோ' என்ற கண்ணதாசன் வரிகள் மனிதர்களுக்கு மட்டுமில்லை. இந்த செயற்கைக்கோளுக்கும் கூடப் பொருந்தும் போலும்!

நாலு கட்டங்களில், ராக்கெட்டின் பகுதிகள் தானாக உதிர்ந்து விழ, ஐ.ஆர்.எஸ். 1 டி





## ஐ.ஆர்.எஸ். 1 டி பற்றி...

பூமியை விட்டுப் புறப்பட்ட 1090வது விநாடியில் தன் பாதையில் சென்றடைந்தாலும், திட்டமிட்ட பாதையை விட சற்றே விலகித்தான் பூமியைச் சுற்றிக் கொண்டிருக்கிறது. ஆனால், உரிய கட்டளைகளை அனுப்பி, செயற்கைக் கோளில் இருக்கும் எரிசக்தி, பாட்டரி இவை மூலம், திட்டமிட்ட ஒரிஜினல் பாதைக்கு நகர்த்தி விட முடியும் என்று விஞ்ஞானிகள் நம்பிக்கை தெரிவித்துள்ளனர். (இந்நேரம் செய்திருப்பார்கள்).

இந்த செயற்கைக்கோள் ஒருமுறை பூமியை வலம்வர சுமார் 100 நிமிடங்கள் ஆகிறது.

இந்தியா அனுப்பிய முந்தைய மூன்று செயற்கைக்கோள்களும் ரஷ்யாவுக்கு எடுத்துச் செல்லப்பட்டு, அங்கிருந்துதான் விண்ணில் செலுத்தப்பட்டது. விடுதலைப் பொன் விழாக் காணும் இந்தத் தருணத்தில், முழுக்க முழுக்க ஏவுகணை, செயற்கைக்கோள் இரண்டையும் நம் விஞ்ஞானிகளே உருவாக்கி, இந்திய ஏவுகணைத் தளத்திலிருந்தே விண்ணில் ஏவுவது எத்தனை பெரிய சாதனை!

சரி! இந்த செயற்கைக்கோளினால் என்ன பிரயோஜனம்?

விவசாயத்துறையிலிருந்து, விண்வெளி விவகாரம் வரை பல்துறைப் பயன்கள் உண்டு. காடுவளம், கனிம வளம் பற்றிய அரிய தகவல்கள் பெறலாம். புவியியல் விவரங்கள் பெறலாம். இந்த செயற்கைக்கோள் தரும் விவரங்கள் நம் நாட்டுக்கு மட்டுமின்றி, உலக நாடுகள் அனைத்துக்குமே உபயோகமாக இருக்கும்.

'அரும் பெரும் விஞ்ஞான சாதனை ஒன்றைப் பற்றி விஞ்ஞான பூர்வமாய் எழுதாமல், இப்படி இடக்குமடக்காக எழுதிய உம் தலையில் செயற்கைக் கோள் விழ' என சாபமிடப் போகும் வட்டமேஜை வாசகர்களிடமிருந்து தப்பிக்க சில விஞ்ஞானபூர்வமான தகவல்கள் :

இந்தியா அனுப்பியுள்ள நாலாவது தொலையுணர்வு செயற்கைக்கோள் இது. பி.எஸ்.எல்.வி. ராக்கெட் மூலமாய் செலுத்தப்பட்டு, விண்வெளியில் பூமியிலிருந்து 826 கி.மீ. உயரத்தில், வடக்கு தெற்காக, துருவப் பாதையில் இது சுற்றிவரும்.

என்ற அந்த செயற்கைக் கோள் மட்டும் புறப்பட்ட பதினெட்டு சொச்ச நிமிடத்திலிருந்து, தனியாக விண்வெளியில் பூமியைச் சுற்ற ஆரம்பித்து விட்டது.

அந்த நிமிடத்தில், மறுபடி டெலிவிஷனில் கட்டுப்பாட்டு அறை காட்டப்படுகிறது. விஞ்ஞானிகள், திட்டமிட்ட பணி இனிதே நிறைவேறிய சந்தோஷத்தில் ஒருவரையொருவர் கட்டித் தழுவி, கைகுலுக்கிக் கொள்ளுகிறார்கள்.

அடுத்த அரைமணியில் பிரதமரின் பிரஸ் மீட். பிரதமர் பேசியதன் ஹைலைட் : "அயல் நாடுகள், நமக்குத் தேவையான தொழில் நுட்பத்தை அளிக்க மறுப்பது பற்றி நமக்குக் கவலையில்லை. அது, நம் விஞ்ஞானிகளுக்கு சாதனைகள்புரிய ஒரு வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுக்கிறது. சோதனைகளை, சாதனைகளாக்கும் நம் விஞ்ஞானிகளின் திறமை இன்று இங்கே நிரூபிக்கப்பட்டுள்ளது."

கவர்னர் பாத்திமா பீவி, 'விஞ்ஞானி, கஸ்தூரிரங்கன் கேரளத்துக்காரர்' என்று சொல்லி சந்தோஷப்பட்டுக் கொண்டார்.

கச்சிதமாய் கால்மணியில் பிரஸ்மீட் முடிந்தது.

பிரதமர், தமிழக கவர்னர், ஆந்திர முதல்வர் ஆகியோருக்கு தருவதற்காக, பளபளக்கிற செயற்கைக்கோள், ராக்கெட் மாதிரிகளை தயாராய் வைத்திருந்தார்கள். ஆனால், பிரஸ் மீட் முடிகிறபோது, அவற்றைக் கொடுக்க மறந்து போய் விட்டார்கள்.

மேடையை விட்டு, கீழே இறங்கப் போன வி.வி.ஐ.பி.கள் மீண்டும் மேடையேறி வந்து நினைவுப் பரிசுகளைப் பெற்றுக் கொண்டு சிரித்தபோது, அது போட்டோவுக்காகவா? மறதியை நினைத்தா என்று சந்தேகம் வந்தது.

ஸ்ரீஹரிகோட்டா போய், குளோஸ்டு சர்க்யூட் டீ.வி.யில் பார்த்தாலும், ஒரு வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த சந்தோஷத்தில் நேரில் கலந்து கொண்ட சந்தோஷம் இருக்கவே செய்தது.

— எஸ். சந்திரமௌலி

குமரன்
சில்க்ஸ்
வழங்கும்
திகட்டாத தீபாவளி
கலெக்‌ஷன்

பூபாளம்
பொழிந்திடும்
பூமேகம்
பூரிப்பில்
பொலிந்திடும்
பூந்தேகம்

மங்களகரமான
தீபாவளியை நீங்கள்
கொண்டாடி மகிழ்ந்திட
குமரன் சில்க்ஸ்
வழங்குகிறது பல
புதிய ரக ஆடைகள்.

ஒவ்வொன்றும் இதய
யாழை இதமாய்
மீட்டும் வர்ண
ஸ்வரங்கள்.

நியாயமான விலைகளில்
அனைத்தும்
ஒரே இடத்தில்.



ஆடைகளில் எல்லோருக்கும் எல்லாமுமே
குமரன் சில்க்ஸ்
558-560, ஒப்பணக்கார வீதி,
கோயமுத்தூர் - 641 001. போன் : 391555

ஜ ன ர ஞ் ச க மா ன   ஜ வு ளி மா ளி கை

# “விருது வாங்கலியோ

விருது, பட்டங்கள் போன்றவையெல்லாம் ஒரு காலத்தில் மிக அபூர்வமாகவும், விலை மதிப்பில்லா கௌரவமாகவும் கருதப்பட்டது. இப்போதோ தமிழகத்தில் பாதிப்பேராவது ஏதேனும் பட்டம் அல்லது விருது வாங்கி வைத்திருக்கிறார்கள்.

அரசு மற்றும் சில தனியார் அமைப்புகள் மட்டும் விருது தந்தது போய்.. இப்போது வெறும் விருது வழங்குவதற்கு மட்டுமே பல அமைப்புகள் தோன்றிவிட்டன. ஊருக்கு ஊர் விருதுகளும் பட்டங்களும் அள்ளி வீசப்படுகின்றன. மதுரையும் இதற்கு விதிவிலக்கு அல்ல.



• கே. பாலசந்தருக்கு 'திரைவானின் விடிவெள்ளி' விருது...

இது போன்று விருதுகள் வழங்குவதால் அந்த அமைப்புகளுக்கு என்ன லாபம்?

“நகரின் முக்கிய பிரமுகர்கள், சினிமா நட்சத்திரங்களுக்கு விருதுகள் வழங்குவதன் மூலம் இவர்களுக்குப் பிரபலம் கிடைக்கிறது. போஸ்டர்கள், நாளிதழ்களின் செய்திகள் மூலமாக இவர்கள் பெயர் பிரபலமாகி விடுகிறது. பல வி.ஐ.பி.களை மேடையில் ஏற்றி விடுவதால் அவர்களுக்கு இணையான வி.ஐ.பி. அந்தஸ்தும் கிடைக்கிறது. இவை போக முக்கிய பிரமுகர்களின் விளம்பர மோகங்களைப் பயன்படுத்தி அவர்களோடு தொடர்பு ஏற்படுத்திக் கொண்டு, வேறு பல காரியங்களையும் அவர்கள் மூலம் செய்து கொள்ள முடிகிறது.. கணிசமான சம்பாத்தியமும் கிடைக்கிறது” என்றுதான் பலரும் முணுமுணுக்கிறார்கள். இது குறித்து சம்பந்தப்பட்டவர்கள் சிலரையே சந்தித்துக் கேட்டால் என்ன?

விருதுகள் வழங்க மதுரையில் நான்கு அமைப்புகள் உள்ளன. அவற்றில் ஒன்று 'அமுதசுரபி கலை மன்றம்!' அதன் தலைவர் வீ. பாலகிருட்டிணன் மதுரை மாநகராட்சி ஊழியர். அவரைச் சந்தித்துக் கேட்டோம்.



• வீ. பாலகிருஷ்ணன்



• புலவர் சங்கரலிங்கம்



• பிரான்சிஸ் பாஸ்டின்

“எங்கள் கலைமன்றம் 22 வருடமாக நடைபோட்டுக் கொண்டுள்ள ஓர் அமைப்பு.. சிறந்த மாணவர்களுக்குப் பரிசுகள், இலவச நோட்டுகள் வழங்குதல், கண் சிகிச்சை முகாம், சுதந்தர தின விழாவில் பாலர் கைதிகளுக்கு இனிப்பு வழங்குதல், பாரதி நினைவு தினத்தில் அவர் பணி புரிந்த சேதுபதி பள்ளி மாணவர்கள் 300 பேருக்கு பாரதியார் கவிதை நூல் வழங்குதல்,

ஊனமுற்றோருக்கு உதவி மற்றும் பொதுமக்கள் குறைகளை சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குத் தெரிவித்தல் என்று எவ்வளவோ சமூக சேவைகளைச் செய்து வருகிறோம்.

"கலை மன்றம் என்று இருப்பதால் சில கலைஞர்களுக்கும், இயக்குநர்களுக்கும் வருடம் ஒருமுறை விருதுகள் வழங்குகிறோம். அதே போல் தரமாகவும், உண்மையாகவும் செயல்படுகிற சில தனி நபர்களையும், நிறுவனங்களையும் ஊக்கப் படுத்துகிற விதமாகவும் விருதுகள் வழங்குகிறோம். இதில் குறை காண்பது முறையா? நாங்கள் மற்றவர்கள் மாதிரி பகட்டாக ஏ.சி. ஹால்களில் விழா நடத்துவதில்லை. நடு ரோட்டில்தான் நடத்துகிறோம். சினிமா பிரபலங்களை அழைக்கும்போது டிக்கெட் போட்டுக்கூட நாங்கள் சம்பாதிக்கலாம். ஆனால் நாங்கள் செய்வதில்லை. எங்கள் விழாவை மக்கள் விழாவாக வீதியில்தான் நடத்துகிறோம். இயக்குனர்கள் கே. பாலசந்தர், பி. வாசு போன்றவர்கள் கலந்து கொண்ட ஒரே வீதி விழா எங்கள் விழாதான்.

# விருது!”



• பி. வாசுவுக்கு 'நவரச இயக்குனர்' விருது...

"நாங்கள் முன் சொன்ன சேவைகள், இந்த விழாவையெல்லாம் நிதி இல்லாமல் செய்ய முடியாதுதான். ஆனால் நாங்கள் யாரிடமும் பணமாகப் பெறுவதில்லை. ஒவ்வொரு உதவியையும், ஒவ்வொருவரைச் செய்து தருமாறு கேட்டுக் கொள்வதோடு சரி. எனவே, இதன் மூலம் சம்பாத்தியத்திற்கு வாய்ப்பில்லை. சினிமா கலைஞர்கள் நாங்கள் அழைத்ததுமே வீதி விழாவாக இருந்தாலும் பரவாயில்லை என்று கலந்து கொள்வதன் மூலமே எங்கள் விருதுக்குள்ள மதிப்பை நீங்கள் புரிந்து கொள்ளலாம்" என்றார் வீ. பாலகிருட்டிணன்.

நகர பண்பாட்டுக் கழகத்தின் தலைவரான பிரான்சிஸ் பாஸ்டினை சந்தித்தபோது அவசரமாய் வெளியூர் புறப்பட்டுக் கொண்டிருந்தார். "சூப்பர் ஸ்டார் ரஜினியிடம் ஒருமுறை பேசிக் கொண்டிருந்தபோது 'ஒரு நல்லவனை நாம் பாராட்ட மறுக்கும்போது ஒரு கெட்டவன் உருவாக அது வழி வகுக்கிறது' என்று சொன்னார். அந்த எண்ணத்தில்தான் நல்லவர்களையும், தரமான நிறுவனங்களையும் பாராட்டும் நோக்கோடு விருதுகள் வழங்குகிறோம். மீதி விவரங்களை செயலாளர் சங்கரலிங்கத்திடம் கேட்டுக் கொள்ளுங்கள்" என்று கூறிப் புறப்பட்டு விட்டார்.

புலவர் சங்கரலிங்கத்தைச் சந்தித்தபோது, "விழா நடத்துவதற்கு நன்கொடைகள் வாங்குவதில்லை. சில சமூக சேவைகளைச் செய்ய நன்கொடைகள் பெறுகிறோம். ஆனால் நன்கொடை தருபவர்களுக்குத்தான் விருது என்பதில்லை. நன்கொடை தர இயலாத எத்தனையோ பேருக்கு விருதுகள் வழங்கியுள்ளோம்" என்றார்.

ஒரு குறிப்பிட்ட ஆங்கிலப் பள்ளிக்கு வருடா வருடம் விருது கொடுப்பது பற்றியும், கடந்த வருடம் 'எல்லோ பேஜஸ்' வெளியிடாத ஒரு நிறுவனத்திற்கு 'சிறந்த எல்லோ பேஜஸ்' விருது கொடுக்கப்பட்டதாகக் கூறப்படுவது குறித்தும் கேட்டபோது, "இதெல்லாம் விருது கிடைக்காத பொறாமையில் சிலர் அள்ளித் தெளிக்கும் வார்த்தைகள் தவிர ஒரு நிறுவனம் தரமான நிறுவனமாகவே தொடர்ந்து இயங்கும்போது மீண்டும், மீண்டும் விருது வழங்குவதில் தவறென்ன?" என்றார் சங்கரலிங்கம்.

மதுரையிலிருந்து: **எஸ்.ஜே. இதயா**

# “98”-ல் திரும்பி வருவேன்!”





**ஸ்ரீநாத். இந்திய அணியின் துவக்கப் பந்து வீச்சாளர். இலங்கையில் நமது அணி அடைந்த படுதோல்விக்குக் முக்கிய காரணம், தோள் பட்டை வலி (தோள் பட்டை சிறிதளவு சரிந்து விட்டது) காரணமாக ஸ்ரீநாத் நமது அணியில் இடம் பெற முடியாமல் போனதுதான் என்று விமர்சகர்களால் குறிப்பிடப்பட்டவர். சிகிச்சை காரணமாக முழு சைவமாக இருந்த இவர், அசைவமும் சாப்பிட ஆரம்பித்திருக்கிறார். இஞ்சினியரிங் படிப்போடு, எம்.பி.ஏ.வும் படித்தவர். கன்னடம், இந்தி, தமிழ், ஆங்கிலம், ஜெர்மன், பிரெஞ்சு ஆகிய ஆறு மொழிகள் அறிந்தவர். சிண்டிகேட் வங்கியில் பணிபுரிந்த இவர், சில மாதங்களுக்கு முன்பு இந்தியன் ஏர்லைன்ஸில் வேலைக்குச் சேர்ந்து விட்டார். அண்மையில், இவர் பெற்ற அர்ஜுனா விருதுக்காக இவரைப் பாராட்டுகிற வகையில் பெங்களூரில் ஒரு விழா நடத்தியது இந்தியன் ஏர்லைன்ஸ். அந்த விழாவில் இவரைச் சந்தித்தபோது, உடனடியாக நமக்கொரு சிறப்புப் பேட்டியளித்தார். பேட்டியின் போது ஸ்ரீநாத் தமிழிலேயே பேசினார்...**

**கல்கி :** கோரமண்டல் கோப்பைக்காக இந்தியன் ஏர்லைன்ஸ் அணியில் ஆடிய நீங்கள் பழையபடி சிறப்பாகப் பந்து வீசியதாகக் கேள்விப்பட்டோம். இப்போது உங்கள் தோள் பட்டை வலி பூரணமாக குணமாகி விட்டதா?

**ஸ்ரீநாத் :** பத்து ஓவரையும் நான் தொடர்ந்து போடவில்லை. இரண்டு ஸ்பெல் (spell) ஆகப் போட்டேன். முதல் ஸ்பெல்லைவிட இரண்டாவது ஸ்பெல்லில் நன்றாகப் போட்டேன். பழைய ரிதம் கிடைத்து விட்டது என்பது உண்மைதான். ஆனாலும் முழுமையாகக் குணமடைந்து விட்டேன் என்று சொல்ல முடியாது. அதற்கு இன்னும் சில காலம் ஆகலாம்.

**கல்கி :** அண்மையில் நீங்கள் சென்னைக்கு வந்து, ஆஸ்திரேலிய பௌலர்கள் லில்லியையும் தாம்சனையும் சந்தித்தீர்களே, அவர்கள் என்ன சொன்னார்கள்?

**ஸ்ரீநாத் :** நான் எம்.ஆர்.எஃப் பேஸ் பவுண்டேஷனில் முன்பு பயிற்சி பெற்ற போதும் அவர்கள் எனக்குப் பயிற்சியளித்தவர்கள் தானே! எனது தோள்பட்டை வலி பற்றிச் சொன்னபோது, சில ஆலோசனைகளை வழங்கினார்கள்.

**கல்கி :** என்ன ஆலோசனைகள்?

**ஸ்ரீநாத் :** பந்து வீச்சாளர்களுக்குத் தோள்கள் பரந்து விரிந்து இருக்க வேண்டியது அவசியம் இல்லையா! அதற்காகப் பளு தூக்கும் பயிற்சிகள் செய்ய வேண்டும் என்றார்கள். நான் பந்து வீசும் போது எப்படி வீச வேண்டும் என்பதையும் சொன்னார்கள்.

**கல்கி :** உங்களுக்கு ஏற்பட்ட இந்தத் தோள் பட்டை வலி என்பது நீங்கள் தொடர்ந்து பந்து வீசியதால் ஏற்பட்டதுதான் என்று லில்லியும் தாம்சனும் கூறியிருக்கிறார்களே. அது உண்மை தானா?

**ஸ்ரீநாத் :** உண்மைதான். கடந்த இரண்டு ஆண்டுகளில் நான் நிறையவே பந்து வீசியிருக்கிறேன்.

**கல்கி :** ஆக, ஓவர் பௌலிங்கால்தான் உங்களுக்குத் தோள்பட்டை வலி ஏற்பட்டது என்பதை நீங்களும் ஒப்புக் கொள்கிறீர்கள். இல்லையா?

**ஸ்ரீநாத் :** என்ன, உங்களுக்குப் பேட்டி கொடுத்ததே தப்பாகிவிட்டதே... *(சிரிக்கிறார்).*

என்னை மாட்டி விடுவது என்கிற முடிவோடு தான் வந்திருக்கிறீர்களா? (மீண்டும் சிரிக்கிறார்).

**கல்கி** : பொதுவாகவே உலகின் வேகப் பந்து வீச்சாளர்களெல்லாம் மூட்டுவலியைத் தான் சந்திப்பார்கள். உங்களுக்கோ தோள் பட்டை வலி. இது ஏன்?

**ஸ்ரீநாத்** : எனக்கு ஏன் மூட்டுவலி வரவில்லை என்கிறீர்களா? (சிரிக்கிறார்). அது வேறு வர வேண்டுமா? (சிரிக்கிறார்). எப்படியோ தோள்பட்டை வலி வந்து விட்டது. அதுவும் 90 சதம் குணமாகி விட்டது. இன்னும் இரண்டொரு மாதத்தில் மீதியும் குணமாகி, பழையபடி விளையாட வந்து விடுவேன் என்று நம்புகிறேன்.

**கல்கி** : பந்து வீச்சில் உங்களுக்கு உதவ பிரசாதும், குருவில்லாவும் இருக்கிற நிலையில் கூட நீங்கள்தான் அதிகப் பந்துகளை வீசுவீர்கள். இந்த நிலையில் இங்கிலாந்திலுள்ள கவுண்டி (நமது ரஞ்சி கோப்பை மேட்ச் மாதிரி) மேட்சில் விளையாட நீங்கள் அவசியம் சென்றிருக்க வேண்டுமா என்ன? அதைத் தவிர்த்திருக்கலாமே?



**ஸ்ரீநாத்** : நான் அங்கு சென்று விளையாடியது பந்து வீச்சில் இன்னும் கற்றுக் கொள்வதற்காகத்தான். உலகின் தலைசிறந்த ஆட்டக்காரர்கள் அங்கே வந்து விளையாடுவதால், அவர்களுக்கு எதிராகப் பந்து வீசுவதும், ஆடுவதும் தலை சிறந்த அனுபவமல்லவா! இந்த அனுபவத்துக்காகத்தானே எனது முன்னோடியான கபிலும் அங்கே இரண்டு ஆண்டுகள் சென்று விளையாடினார். உலகையே தங்கள் அதிவேகப் பந்து வீச்சால் கலக்கும் பாகிஸ்தான் வீரர்களான அக்ரம், யூனுஸ் போன்றோர் அங்கே தொடர்ந்து சென்று விளையாடுகிறார்களே! எனவே, அதுதான் எனது தோள்பட்டை வலிக்குக் காரணம் என்பது சரியல்ல.

**கல்கி** : தென்னாப்பிரிக்க கிரிக்கெட் போர்டு, தனது பௌலர் டொனால்டுக்கு கவுண்டியில் விளையாட அனுமதி தரவில்லை. இதே போல ஆஸ்திரேலிய லெக் ஸ்பின்னர் வார்னே, அடுத்த ஆண்டு அங்கே விளையாடப் போவதை ஆஸ்திரேலிய கிரிக்கெட் போர்டும் பத்திரிகைகளும் கடுமையாக எதிர்த்துக் கொண்டிருக்கின்றன. காரணம், ஓவர் பௌலிங்கால் எங்கே தாங்கள் அவர்களை இழந்து விடுவோமோ என்கிற பயம் தானே?

**ஸ்ரீநாத்** : எஸ். நீங்கள் சொல்வது உண்மைதான். ஆனால் பந்து வீச்சில் நிறையக் கற்றுக் கொள்ள வேண்டும் என்பதற்காகவே அங்கு சென்றேன். எதிர்பார்த்தபடியே நிறையக் கற்றுக் கொண்டேன். அவ்வளவுதான்.

**கல்கி** : இப்போது நமது அணியில் இடம் பெற்றுள்ள மொகந்தி, ஹர்பிந்தர் சிங் பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?

**ஸ்ரீநாத்** : அவர்கள் நன்றாகப் பந்து வீசியதால்தானே அணியில் தேர்வு செய்யப்பட்டுள்ளார்கள். நானும் டீவியில் பார்த்தேன். அவர்கள் நன்றாகவே பந்து வீசினார்கள்.

**கல்கி** : நீங்கள் மீண்டும் எப்போது நமது அணியில் விளையாட வருவீர்கள்?

**ஸ்ரீநாத்** : இந்த மாதம் ஆஸ்திரேலியா சென்று டாக்



டரைச் சந்திக்க உள்ளேன். வில்லியும் தாம்சனும் எனக்கு அங்கே உதவுவார்கள். மூன்று வார காலம் அங்கே நான் இருக்க வேண்டி வரலாம். பிறகு இந்தியா திரும்பியதும் வரும் ஜனவரியில் வரவிருக்கின்ற ஆஸ்திரேலியத் தொடரின் போது பழையபடி நமது அணியில் விளையாட முடியுமென்று கருதுகிறேன்.

**கல்கி :** நீங்கள் பழையபடி இந்திய அணிக்கு வரும்போது உங்களோடு குருவில்லா, மொகந்தி, ஹர்பிந்தர் சிங், பிரசாத் என ஐந்து வேகப் பந்து வீச்சாளர்கள் இருப்பீர்கள். அப்போது யாருக்கு வாய்ப்புக் கிடைக்கும்?

**ஸ்ரீநாத் :** நல்ல போட்டியாக இருக்கும். போட்டி எனக்குப் புதிதல்லவே! கடும் போட்டியில் திறமை காட்டுபவன்தானே நல்ல பௌலர். என் மீது எனக்கு நம்பிக்கை இருக்கிறது.

**கல்கி :** நீங்கள் விரைவில் பூரண குணமடைந்து பழையபடி விளையாட வர கல்கியின் சார்பிலும் வாசகர்கள் சார்பிலும் வாழ்த்துக்கள்.

**ஸ்ரீநாத் :** மிக்க நன்றி. இது போன்ற வாழ்த்துக்கள்தான் என்னைப் போன்றோருக்கு உற்சாகம் தருகிற டானிக். உங்கள் வாழ்த்துக்களுக்கு மறுபடியும் எனது நன்றி.

**கல்கி :** சரி. உங்கள் திருமணம் எப்போது?

**ஸ்ரீநாத் :** அதற்கு என்ன அவசரம் இப்போது? உங்களுக்குச் சொல்லாமலா செய்து விடப்போகிறேன்? என் முதல் பத்திரிகையே உங்களுக்குத்தான்:

பேட்டி : **நந்தினி**

அட்டை வண்ணப்படம் : **சாரி**

# காதில் விழுந்தவை!

● தமிழ்ப் பத்திரிகை உலகத்தில் 'புலனாய்வு ரிப்போர்ட்டுகள்' எந்த லட்சணத்தில் இருக்கின்றன? மத்திய அமைச்சர் மாறன் அமெரிக்கா சென்றபோது 'அவருக்குத் தலைக்குள் ஏதோ வியாதி... சிகிச்சைக்காகத்தான் சென்றிருக்கிறார்' என்று எழுதினார்கள். உடனே மாறனுக்குச் சொந்தமான பத்திரிகையில், "புலனாய்வு பத்திரிகை ஆசிரியருக்குப் புற்று நோயாமே. சிகிச்சைக்கு அமெரிக்கா போயிருக்கிறாரே' என்று கிககித்தார்கள். இரண்டுமே பொய்யான ரிப்போர்ட். மாறனுக்கு எந்த நோயும் கிடையாது. அது போலவே புலனாய்வுப் பத்திரிகை ஆசிரியர் வருடத்திற்கு ஒருமுறை, அமெரிக்காவில் உள்ள தமது மகளைப் பார்ப்பதற்குச் சென்று வருவார். இதுதான் விஷயம்.

● வீரப்பன் விவகாரத்தில் வீரப்பன் - கலைஞர் - நக்கீரன் கோபால் ஆகியோர் கூட்டணி அமைத்து ஏதோ 'அஜால் குஜால்' வேலை செய்திருக்கிறார்கள் என்று மக்களிடம் எடுத்துச் சொல்வதன் மூலம் தி.மு.க. அரசின் இமேஜை உடைப்பதில் இறங்கியிருக்கிறார் ஜெ. இந்த விவகாரத்தில் ஜெவுடன் ஆங்கிலப் பத்திரிகை அதிபர் ஒருவரும் கூட்டணி சேர்ந்திருக்கிறாராம். இப்போது அந்தப் பத்திரிகையின் சிறப்புச் செய்தியாளர் இது சம்பந்தமாக சேலம், கோவை, மாவட்டங்களில் சுற்றிக் கொண்டிருக்கிறாராம். 'ஏதாவது' ஆதாரம் கிடைத்தால் தேர்தலின் போது பயன்படுத்துவார்களாம்.

● கொஞ்சம் செல்வாக்கு மிக்க தி.மு.க. மாவட்டச் செயலாளர் ஒருவரும் ம.தி.மு.க. மாவட்டச் செயலாளர் ஒருவரும் சந்தித்துக் கொண்டார்கள். "என்னண்ணே... எங்களைப் போன்ற ஆட்கள்தான் சுத்தமாக இருந்து ஆட்சிக்கு நல்ல பெயர் வாங்கித் தர வேண்டியிருக்கு. ஆனால் உயர் மட்டத்தில் ஒரு கும்பல் பேரைக் கெடுத்திட்டு இருக்கு' என்று ஆதங்கத்தில் புலம்பினார் தி.மு.க. செயலாளர். அதைக் கேட்ட ம.தி.மு.க. செயலாளர், 'அட போப்பா... ஏதாவது புதுசா சொல்வேன்னு பார்த்தா, பழைய கதையையே ரிபீட் பண்றயே!' என்று சலித்துக் கொண்டாராம். பொதுத் தேர்தல் சமயத்தில் ம.தி.மு.கவை ஜெ. கழற்றி விட்டு விடுவார் என்பது அந்த ம.தி.மு.க. செயலாளரின் கணிப்பாம்.

● 'குமரி அனந்தன் பா.ஜ.க.வில் சேருவார்' என்று 'புலனாய்வு' செய்து ஒரு பத்திரிகை செய்தி வெளியிட்டதிலிருந்து, அவரது அலுவலகத்துக்கு ஏகப்பட்ட தொலைபேசித் தொடர்புகள். பதில் சொல்லி சலித்துப் போனார் குமரியின் உதவியாளர். அது சரி அந்தச் செய்தியில் ஏதாவது உண்மையிருக்கிறதா? "இறந்த பின்பு தன்மீது காங்கிரஸின் மூவர்ணக் கொடி போர்த்தப்படுவதையே தலைவர் லட்சியமாக வைத்திருக்கிறார். த.மா.காவில் சேரலாம் என்று தொண்டர்கள் அவரை வற்புறுத்தி வந்தார்கள். ஒரு வேளை எங்கள் தலைவர் த.மா.காவில் சேருவதை விரும்பாத சிலர் இது போன்ற புரளிகளைக் கிளப்பி விட்டிருக்கலாம்!" என்கிறார்கள் குமரியாரின் அணுக்கத் தொண்டர்கள்.

● ஒரு பன்னாட்டு நிறுவன விளம்பர நிர்வாகியிடம் பேசிக் கொண்டிருந்த போது அவர் சொன்னார். "... அந்த அமைச்சர் அலுவலகத்திலிருந்து தொல்லை தாங்க முடியலை. குறிப்பிட்ட தொலைக்காட்சிக்கு விளம்பரம் கொடுக்கச் சொல்லி பயங்கர ப்ரஷர்!" அந்த தொலைக்காட்சியில் வரும் பற்பசை விளம்பரங்கள் இந்த 'ப்ரஷரு'க்குப் பிறகு வாங்கியவைதானாம்!

— **தில்லப்பா**



# அன்னை தெரஸாவுக்குக் கிடைக்குமா 'செயின்ட்' மரியாதை?

மத சேவையையும், மனித சேவையையும் மட்டுமே குறிக்கோளாகக் கொண்டிருந்த அன்னை தெரஸாவை 'துறவி' – அதாவது செயின்ட் – என்று அவர் வாழ்ந்த காலத்திலேயே பலரும் குறிப்பிட்டதுண்டு. ஆனால் அவர் பின்பற்றிய கத்தோலிக்க மதத்தின் தலைமைப் பீடம் இன்னமும் அவரை அதிகாரபூர்வமாக 'செயின்ட்' என்று அறிவிக்கவில்லை. சராசரியாக ஐம்பது வருடங்களுக்கு ஒருமுறை ஒருவருக்கு இப்படி செயின்ட் பட்டம் வழங்கப்படும். வாடிகனில் உள்ள போப் இரண்டாம் ஜான் பால் முடிவு செய்தால், நீண்டதொரு நடைமுறையைப் பின்பற்றாமலேயே அன்னை தெரஸாவை 'செயின்ட் தெரஸா'வாக அங்கீகரிக்கலாம்.

பொதுவாக கத்தோலிக்க மதத்தின் தலைமைப் பீடம் ஒருவரை செயின்ட்டாக அறிவிக்க வேண்டும் என்றால் முதலில் குறிப்பிட்ட நபர் அப்படி ஒரு பெரும் தெய்வீக அங்கீகாரத்துக்கு ஏற்றவர்தான் என்பதை உள்ளூர் மக்கள் எடுத்துரைக்க வேண்டும். அவர்களது கூற்றும், அவற்றிற்கான ஆதாரங்களும் பரிசீலிக்கப்படும். அவரைப் பற்றி எழுதப்பட்ட கட்டுரைகள் மற்றும் நூல்கள் இவையெல்லாம்கூட ஆராயப்படும். அதற்கு அடுத்தகட்டமாக ஒன்பது பேர் அடங்கிய குழு ஒன்று அவர் குறித்த தங்களது எண்ணத்தைத் தீர்ப்பாக அளிப்பார்கள். இதை போப்பும் ஏற்றுக் கொண்டால் 'Venerable' (வணக்கத்துக்குரிய) என்று அவரை அறிவிப்பார்.

'செயின்ட்' என்று அறிவிக்க, குறிப்பிட்ட நபர் தெய்வீக சக்தி கொண்டவராக இருந்திருக்க வேண்டும் என்பதால் அவர் என்ன அற்புதம் நடத்தியிருக்கிறார் என்பது ஆராயப்படும். இந்த அற்புதத்தை அவர் அமரரான பிறகு நடத்திக் காட்டியிருக்க வேண்டும். இந்த அற்புதத்தை முதலில் மருத்துவர் வல்லுநர் குழு ஒன்று ஆராயும். அதற்குப் பிறகு மத குருமார்கள் சிலரைத் தலைமையகம் குறிப்பிட்டு, ஆராயச் சொல்லும். அதற்குப் பிறகு 'பீடிபிகேஷன்' (Beatification – இறந்தவர் பேரின்ப நிலையில் இருக்கிறாரா என்று கண்டறிதல்) என்ற கட்டம். இந்தக் கட்டத்தை தாண்டிய பிறகும் குறிப்பிட்ட அமரர் மற்றொரு அற்புதத்தை நிகழ்த்திக் காட்ட வேண்டும். இதற்குப் பிறகு அவரை 'செயின்ட்' என்று கத்தோலிக்க தலைமை பீடம் அதிகாரபூர்வமாக அறிவிக்கும்.

அன்னை தெரஸாவின் இறுதி ஊர்வலம் இதற்காக ஒரு க்ளுவைக் கொடுக்கும் என்று சிலர் எதிர்பார்த்தார்கள். ஆனால் அப்படி எதுவும் நடக்கவில்லை. 1235–லும், உலகெங்கிலும் உள்ள கத்தோலிக்க கிறித்தவர்கள் மதிப்பு வைத்திருந்த க்ளாரா என்ற பெண்மணிக்கு, 'செயின்ட்' அங்கீகாரம் தரப்பட வேண்டுமென்று அந்த நாட்டின் போப் எண்ணம் கொண்டார். மதிப்புக்குரிய க்ளாரா மரணமடைந்தபோது அவரது இறுதி ஊர்வலத்தில் 'ஏஞ்சலஸ்' என்ற அமைப்பைச் (office of the Angels) சேர்ந்தவர்களைப் பாடுமாறு பணித்தார் போப். அவருக்கு செயின்ட் அங்கீகாரம் கிடைக்கப் போகிறது என்பதற்கான முன்னறிவிப்புதான் இது என்று பலர் கருதினார்கள். ஆனால் அந்தப் பெருமை அவருக்குக் கிட்டவில்லை.

அன்னை தெரஸாவுக்கு இந்த அங்கீகாரம் கிட்டுமா? காலமும், வாடிகனும்தான் பதில் சொல்ல வேண்டும்.

— ஜி.எஸ்.எஸ்.

# சாதிக்க வைக்கும் தொண்டு நிறுவனம்!

குறைந்த செலவில், சுற்றுச் சூழலுக்குக் கேடு விளைவிக்காத வீடுகள், கட்டடங்கள் கட்டுவதில் சத்தமே இல்லாமல் சாதனை புரிந்து வருகிறது, திருவனந்தபுரத்திலுள்ள 'நிர்மிதி கேந்திரம்'.







"உலகில் எல்லாருக்கும் குடியிருக்க வீடு தேவை. ஆனால் அரசாங்கத்தால் அப்படி எல்லோருக்குமே வீடு கொடுக்க முடியுமா? அதனால் நாங்கள் அவர்கள் சுமையைக் குறைக்க முன் வந்தோம்!'' என்கிறார் ஆனந்த போஸ். இவர்தான் 'நிர்மிதி கேந்திர'த்தின் தலைவர். ஐ.ஏ.எஸ். அதிகாரி. 1985ல் கொல்லத்தில் மாவட்ட ஆட்சித் தலைவராக இருந்தவர்.

மகாராஷ்டிராவில், லாட்டூரில் பூகம்பம் வந்து மக்கள் வீடுகளை இழந்த சமயம், அங்கே போய், மளமளவென்று ஐநூறு குடியிருப்புகளைக் கட்டிக் கொடுத்தது. இனியொரு பூகம்பம் வந்தாலும் சிதையாத வண்ணம், 'ட்ரெமர் புரூஃப்' உத்தரவாதத்துடன் கட்டப்பட்டவை அவை.

இவர்கள் கட்டும் வீடுகள் குறைந்த செலவில் கட்டப்படுபவை என்பது மட்டுமல்ல; சுற்றுச் சூழலோடு தோழமை கொண்டாடுகிற வகையிலும் கட்டப்படுகின்றன என்பது மிகவும் விசேஷம். தரையின் மேடு பள்ளத்தைச் சரி சமமாக்குவதில்லை, இவர்கள். மேடாக இருக்கிற இடத்திலேயே அறையைக் கட்டி விடுகிறார்கள்! இதற்கு ஒரே அறையின் தரை, மேடு பள்ளங்களாக இருக்கும் என்பதில்லை. வீட்டிலுள்ள எல்லா அறைகளையும் ஒரே மட்டத்தில் கட்டாமல் ஒவ்வோர் அறையும் இயற்கையாக உள்ளபடியே வெவ்வேறு மட்டத்தில் இருக்கும் என்று அர்த்தம். தென்னை மரத்தைக் கூட, ஜன்னல் சட்டங்களுக்குப் பயன்படுத்துகிறார்கள். உபயோகிப்பதற்கு முன்னால் அதற்கு 'ரசாயன சிகிச்சை' கொடுத்து விடுகிறார்கள்.

மேல் தளத்தில், சென்டரிங் அடிக்கும் முறையில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தி, செங்கல், மங்களூர் ஓடு போட்டு, சிமெண்ட் தவிர்க்கப்பட்டு, சுமார் 40% அளவுக்குச் செலவைக் குறைத்து, சேமிக்க முடியும் என்று காண்பித்திருக்கிறார்கள். (இதை filled slab முறை என்கிறார்கள்.) மக்களின்



தேவையான கட்டுமானப் பயிற்சியை அளிக்கிறது 'நிர்மிதி கேந்திரம்'. கட்டுமானப் பணிகளில் வெளியாருக்கு ஆலோசனைகள் அளித்து 'கன்சல்டன்ஸி' வகையில் வருமானம் பெறுகிறது. சாதாரணமாகத் தொண்டு நிறுவனங்கள் அரசிடமும், ரோடரி - லயன்ஸ் கிளப்புகளிலிருந்தும் நிதி உதவி எதிர்பார்க்கும். ஆனால் 'நிர்மிதி கேந்திரம்' மட்டுமே வருமானத்தை ஈட்டுகிறது!

— சாருகேசி







வருவாய்க்குத் தகுந்தபடியான வீடுகளைக் கட்டித் தருகிறார்கள்.

"வீடுகள் கட்டுவதற்காக நாங்கள் கையாளும் எல்லா முறைகளும் ஏற்கெனவே தொழிற் கல்லூரிகளிலும், ஐ.ஐ.டி.யிலும் செய்து பார்க்கப்படுபவைதாம். ஆனால், பிறகு யாரும் அந்த டெக்னாலஜியை நடைமுறையில் கொண்டு வர முயலுவதில்லை!" என்கிறார் ஆனந்த போஸ்.

இங்கே பணிபுரிபவர்களில், 60 சதவிகிதத்துக்கு மேல் பெண்கள். அவர்களுக்குத் தச்சுத் தொழிலிலும் கட்டடத் தொழிலிலும் பயிற்சி கொடுப்பதோடு, ஆண்களுக்குச் சமமாகத் தாங்களும் இந்த வேலைகளைச் செய்ய முடியும் என்கிற நம்பிக்கையையும் ஊட்டிக் களத்தில் இறக்குகிறார்கள்.

"வேலையில் ஆண்களைவிடக் கொஞ்சம் நிதானம்தான். ஆனால் வேலை படு சுத்தம்!" என்கிறார் போஸ்.

தச்சுப் பணி செய்யும் இந்தப் பெண்களைக் கண்ட ஒரு துபாய் இண்டஸ்ட்ரியலிஸ்ட், இருபத்தைந்து பேரை ஒட்டுமொத்தமாக அனுப்பி வைக்கச் சொல்லி விட்டாராம்.

இவையெல்லாம் போதாதென்று மன வளர்ச்சி குன்றியவர்களுக்கும் தச்சுத் தொழில், கட்டுமானத் தொழில் எல்லாவற்றிலும் பயிற்சி கொடுத்து வேலையும் கொடுத்திருக்கிறார்கள்.

அரசாங்கத் திட்டங்களுக்குத்

# ஒற்றுமையே வாழ்வின் சாராம்சம்



**தாயும் மகளும்**

மென்மை, அன்பு, பரஸ்பரம், புரிந்து கொள்ளுதல் இவை நிறையப் பெற்று எக்காலத்திலும் இணை பிரியாத ஒரு உறவு அது. காலம் செல்லச் செல்ல கனிவுறும் இவ்வுறவு, இருவரையுமே திறமை மற்றும் சக்திமிக்கவர்களாக ஆக்குகிறது.

நட்புணர்வு. ஒன்றுபடச் செய்யும் ஒரு உணர்வு. வாழ்வை அர்த்தமுடையதாக்கி ஒளிரச் செய்வது அது. நாளையத் தேவைகளான திருமணம், கல்வி இன்னும் பிற சுப காரியங்களுக்காகவும் திட்டமிட்டு சேமித்து எதிர்காலத்தை வாழ்வதற்குகந்த, பாதுகாப்புமிக்க இடமாக்குவதும் அதுவே. முக்கியமாக, சேமிப்பதற்கும், தேவை ஏற்பட்டால், உங்களது பணத்திலிருந்தே பெருமையுடனும் உரிமையுடனும் கடன் பெற்றுக் கொள்வதற்கும் ஏதுவாக அரியதொரு வசதியைத் தருகிறது. வாழ்க்கையை நம்பிக்கையுடன் எதிர்கொள்ளும் வாய்ப்பை நல்குகிறது.




ராம் காஷ்யப். உங்களது தேவைகளை புரிந்து கொள்கிறது. அத்துடன் அவற்றை நிறைவேற்றும் வழி முறைகளைத் தனது பல்வேறு சீட்டுத் திட்டங்கள் மூலம் அளிக்கிறது. இத்திட்டங்கள் வாடிக்கையாளர்கள் மற்றும் நிறுவனத்திடையே நெருக்கத்தை ஏற்படுத்தி வாடிக்கையாளரின் தேவைகளைப் புரிந்து கொள்ளவும் தக்க சமயத்தில் அவற்றை நிறைவேற்றி வைக்கவும் வகை செய்கிறது. நிலையில்லாததோர் உலகினிலே பாதுகாப்பான ஒரு நங்கூரம் ராம் காஷ்யப் சிட்ஸ். எதிர்காலத்திற்காக முதலில் திட்டமிடுவது, பின் உடனேயே சேமிப்பில் இறங்குவது என்ற கருத்தினை உருவாக்கியவர்கள்.

**Ram Kaashyap Chits**

Member Ram Kaashyap Group

சீட்டு திருவிழா
1997 அக்டோபர் 1 முதல் 31 வரை

**ஈடில்லா சேமிப்பு; இணையற்ற தீர்வு**

**ராம் காஷ்யப் சிட்ஸ் பிரைவேட் லிமிடெட் நிர்வாக அலுவலகம் :**
14/3 தண்டபாணி தெரு, தி.நகர், சென்னை 600 017. போன் : 4341513, 433004

**கிளைகள் : சென்னை :** ஆழ்வார்பேட்டை போன் : 4970205, மேற்கு மாம்பலம் போன் : 4896638, அண்ணா நகர் கிழக்கு போன் : 610979, அடையாறு போன் 418081, தி.நகர் போன் : 4323437, நங்கநல்லூர் எண்.2, மூன்றாவது மெயின் ரோடு, சென்னை 600 061, **கோயம்புத்தூர்** போன் : 235865, **ஈரோடு** போன் : 79822, **சேலம்** போன் : 418171, **கும்பகோணம்** போன் : 30246, **தஞ்சாவூர்** போன் : 25871, **திருச்சி** போன் : 704752, **மயிலாடுதுறை** 46 எண்.2 ரோடு, (காந்தி ரோடு) மயிலாடுதுறை 609 001, **திருவாரூர்** போன் : 20895, **மதுரை** போன் : 747727, **திண்டுக்கல்** போன் : 34218, **திருநெல்வேலி** போன் : 333808, **காரைக்குடி** எண்.1, T.T. நகர் முதல் தெரு, S.K.N. பில்டிங்ஸ் (கீழ்தளம்) காரைக்குடி 630 001

**நம்பிக்கை பொருளாதார சுதந்திரத்திற்கு அமைத்திடும் பாதை**

Insight-377/97



# கங்கா கௌரி

**வ**டிவேலு - கதையோடும், கதாநாயகனோடும் ஒட்டிய பாத்திரம். சகிக்கபின் மட்டுமல்ல; சிரிக்கபின் காமெடியும்கூட.

அருண்குமார் - அகல, மினுமினுப்பு முகமும் நீள் மூக்கும் - அப்படியே அப்பா விஜயகுமார். நடிப்பு சுமாருக்குக் கொஞ்சம் மேலே.

சங்கீதா - ரொம்ப சாதா.

சிற்பி - இரு பாட்டுகள் ஈர்க்கின்றன. தானே திரையில் தோன்றி சொந்தக் குரலில் "காதனரே காதளரே பூமி உங்கள் பூஞ்சோளை... பூமாளை" என்று பாடுகிறார்! உச்சரிப்புக்கு உளி தேவை.

பழனிபாரதி - சில தமிழ்ச் சொற்களையும் பாடல்களில் பயன்படுத்தியிருக்கிறார்.

லியோனி - கஞ்சப் பிசநாரி பாத்திரம் கைகொடுக்கிறது. பெரிய திரைக்குப் புதுமுகம் என்கிற அளவில் தேறுகிறார்.

அட! - மிகக் குறைந்த பாத்திரங்களுடன் கலகலப்பாகவும் நகைச்சுவையோடும் நகரும் பெரும்பான்மைக் காட்சிகள்.

அட போங்கய்யா - தாலி சென்டிமென்ட் கிளைமாக்ஸ் - வசனங்கள் போன்ற பழைய கதை!

— ஜி

## வியாபாரத்தை அபிவிருத்தி செய்ய, திரு. மகேஷ்

# கடன் ஏதும் வாங்கவில்லை!

**மா**ராக ஸ்ரீராம் சிட்ஸில் தான் சேர்ந்திருந்த சீட்டை தள்ளி எடுத்து, தன் கடையை விரிவுப் படுத்தி, வியாபாரத்தை மேம்படுத்த வழிவகுத்துக் கொண்டார். அனேகர் உயர ஏணியாக இருக்கும் ஸ்ரீராம் சிட்ஸில் தானும் சேர்ந்து வளம் பெற்றார். ஸ்ரீராம் சிட்ஸில் பயன்பெற்ற 7 இலட்சம் சந்தாதாரருள் இவரும் ஒருவர். ஏன், நீங்களும்தான். நீங்கள் பெற்ற அந்த நன்மைகளை மற்றவரோடும் பகிர்ந்து கொள்ளுங்கள்.

ஸ்ரீராம் சிட்ஸின் சந்தாதாரர் என்கிற முறையில், இவ்விழாக் காலத்தில், நண்பர், உறவினர் மற்றும் சக அலுவலருக்கு ஸ்ரீராம் சிட்ஸின் பாரம்பரியப் பாதையை அறிமுகம் செய்யுங்கள். திருமணம், கல்வி, மருத்துவம் அல்லது தொழிலுக்கு என ஸ்ரீராம் சிட்ஸ் உங்களுக்கு உதவியதை அவர்களிடத்தில் எடுத்துரையுங்கள். வாகன நிதியுதவி, மியூச்சுவல் ஃபண்ட், மருந்து, பெட் பாட்டில்கள், சரக்கு போக்குவரத்து, தொழில் மற்றும் ஏற்றுமதித் துறைகளில் தனியிடம் பிடித்த ஸ்ரீராம் குழுமத்தின் முன்னோடி நிறுவனமான ஸ்ரீராம் சிட்ஸின் 14 இலட்ச சந்தோஷ வட்டத்தில் அவரையும் சந்தாதாரராய் இணைத்திடுங்கள்.

புதிய சந்தாதாரரை நீங்கள் அறிமுகம் செய்யும் போது மூன்று வர்ணங்கள் அல்லது அசோக சக்கரம் தாங்கிய பரிசுக் கூப்பனை பெறுவீர்கள். SS பௌல் முதல் தங்க நெக்லஸ் வரையிலான பரிசுகளை இக்கூப்பன்கள் உங்களுக்கு பெற்றுத்தரும். நீங்கள் அறிமுகம் செய்யும் நண்பருக்கும் அழகான சந்தாதாரர் பரிசுகள் காத்திருக்கிறது.

*நேரடியாய்ச் சேரும் சந்தாதாரர்களுக்கும் பரிசு உண்டு. பரிசுகளைப் பெற்று பொன்னான நேச இழைகளை நெருக்கமாய் நெய்வோம் வாருங்கள்.*





## ஸ்ரீராம் சிட்ஸ்

ஸ்ரீராம் சிட்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ் லிமிடெட் • ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்
'சுப்ரமணியன் பில்டிங்', 1, கிளப் ஹவுஸ் ரோடு, சென்னை - 600 002.
போன் : 8520700, 8522651, 8523932, 8525536, 8520797.

**இழப்பற்ற, அதிக லாபம் தரும், என்றும் ஏற்புடைய முதலீடு.**

| | சீட்டுத் தொகை* | | சந்தாதாரர் பரிசுகள் |
|---|---|---|---|
| 1. | 250 x 40 | 10,000 | SS பௌல் (மூடியுடன்) |
| 2. | 500 x 30 | 15,000 | செல்லோ கீப்பிங் கேஸ் |
| 3. | 625 x 40 | 25,000 | கும்பகோணம் SS ஃபான்ஸி கன்டெய்னர் |
| 4. | 500 x 60 | 30,000 | SS கருணி செட் (இரண்டு) |
| 5. | 1000 x 50 | 50,000 | SS CB மப் ஃப்ரை பேன் |
| 6. | 2500 x 30 | 75,000 | செல்லோ ஃப்ளாஸ்க் |
| 7. | 2500 x 40 | 1,00,000 | காஸி SS CB தவா |
| 8. | 5000 x 30 | 1,50,000 | பிக்னிக் செட் |
| 9. | 5000 x 40 | 2,00,000 | ஹாக்கின்ஸ் பிரஷர் குக்கர் |
| 10. | 10,000 x 30 | 3,00,000 | ஜெமினி கிஃப்ட் செட் |
| 11. | 20,000 x 25 | 5,00,000 | 4 கிராம் தங்க நாணயம் |

ஆண்டு வர்த்தகம் ரூ.1000 கோடியை அடைந்ததன் பொருட்டு, புதிய சீட்டு சேரும் சந்தாதாரர் அனைவருக்கும் ஓர் அழகிய பரிசு உண்டு.

*அறிமுகப்படுத்துவோர் பரிசு தற்போதைய சந்தாதாரருக்கு மட்டுமே.
*நுழைவுக்கட்டணம் தனி *முன் அனுமதி பெறப்பட்டது

DATTARAM 62897






1997 அக்டோபர் 12
ஈசுவர புரட்டாசி 26
மலர் : 56
இதழ் : 11

# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## பூச்சாண்டி காட்டும் கேசரி!

"ஐக்கிய முன்னணி அரசுக்கு நாங்கள் நிபந்தனை எதுவும் விதிக்கவில்லை. சும்மா எச்சரிக்கிறோம்; யோசனை கூறுகிறோம் - அவ்வளவுதான்!" என்று கூறியிருக்கிறார் காங்கிரஸ் தலைவர் சீதாராம் கேசரி. ஸ்டார் டீவி. பேட்டியில் அவர் சொன்ன இந்தச் சமாதானம், வேகாத பருப்பு என்பதை நாடே அறியும்!

சில வாரங்களுக்கொருமுறை, ஐக்கிய முன்னணி ஆட்சிக்கான ஆதரவை விலக்கிக் கொள்ளப் போவதாக காங்கிரஸ் மிரட்டுவதும், அரசியல் சூழ்நிலை இறுக்கமடைந்து சூடேறுவதும், அப்புறம் 'சும்மா ஒரு எச்சரிக்கைதான்' என்று கேசரி தடம் மாறுவதும் சூழ்நிலை தளர்வதும் கிட்டத்தட்ட வாடிக்கையாகவே போய்விட்டது!

இதனால் பரிதாபமாகக் காட்சியளிப்பது ஐக்கிய முன்னணி அரசு மட்டுமல்ல என்பதை காங்கிரஸ் உணர்ந்ததாகத் தெரியவில்லை.

காங்கிரஸின் திடமின்மையினால் நாட்டு நிர்வாகமும் பொருளாதார சீர்திருத்தங்களும் ஸ்தம்பித்துப் போய்க் கிடக்கின்றன. எந்நேரமும் ஆட்சிக் கவிழ்ப்பு நேரலாம் என்ற அச்சத்தில் தொழில் வர்த்தகத் துறை வாட்டமுற்றும் பங்கு மார்க்கெட் துவண்டு போயும் காணப்படுகிறது.




அரசு ஊழியர்களிடம் சுறுசுறுப்பும் செயல்நேர்த்தியும் இல்லை. அயல்நாட்டினர் நம் நாட்டில் முதலீடு செய்ய மகிழ்ச்சியோடு முன்வருவதில்லை. அன்னியச் செலாவணி வரவு திருப்திகரமாக இல்லை.

"பொருளாதார சீர்திருத்தங்கள் தொடர வேண்டுமானால் அரசியல் இசைவு (political will) அவசியம் தேவை" என்று உலக அரங்கில் நமது நிதியமைச்சர் பேச நேர்ந்திருக்கிறது.

நாட்டின் பொருளாதாரமும் பங்கு மார்க்கெட்டும் மட்டுமின்றி காங்கிரஸின் கௌரவமும் இந்த ஊசலாட்ட அரசியலினால் பாழ்பட்டு நிற்கிறது என்பதை சீதாராம் கேசரி புரிந்து கொள்ளவில்லை.

ஊழல் முத்திரை குத்தப்பெற்று, கட்டுக்கோப்பு இழந்து, தோல்விகளைப் பரவலாகச் சந்தித்துவிட்ட காங்கிரஸ் ஏற்கெனவே மக்களிடையே கணிசமாக மதிப்பிழந்திருக்கிறது.

இப்போது, 'ஆதரவு - ஆதரவு வாபஸ்' கண்ணாமூச்சியினால் மக்களின் பொறுமை மேலும் சோதிக்கப்பட்டு, காங்கிரஸ் பேரிலான வெறுப்புதான் அதிகரித்து வருகிறது.

இந்நிலையில், காங்கிரஸ் மீண்டும் ஆட்சியைப் பிடிப்பதற்கான செயல் திட்டம் ஒன்றை அக்கட்சியின் செயற்குழுவினர் வகுத்து வெளியிட்டிருக்கிறார்கள் :

- எம்.எல்.ஏ., எம்.பிக்கள், அமைச்சர்கள் கட்சிப் பொறுப்பிலிருப்பவர்கள் என்று அனைவருமே ஆண்டுதோறும் அனைத்திந்திய காங்கிரஸ் கமிட்டியிடம் தங்கள் சொத்து, வருமான கணக்கைச் சமர்ப்பிக்க வேண்டும்.
- உறுப்பினர்களின் ஊழல், முறைகேடுகளைக் கட்டுப்படுத்த நன்னடத்தை விதிகள்




வகுக்கப்பட்டு, அவை கடைப்பிடிக்கப்படுகின்றனவா என்பது கண்காணிக்கப்படும்.

- நன்னடத்தை(ethics) கமிட்டி ஒன்று அமைக்கப்பட்டு, அதன் மூலம் எளிய வாழ்க்கை முறைகள் வலியுறுத்தப்படும்.

செயல் திட்டத்தில் இப்படிப் பல சிறந்த யோசனைகள் இடம்பெற்றிருக்கின்றன.

ஆனால், இவையெல்லாம் எவ்வளவு தூரத்துக்கு அமுலாகும்; இவற்றை அமுல்படுத்தும் தகுதி இன்று காங்கிரஸில் யாருக்கு இருக்கிறது? இந்த முறைகளின்படி காங்கிரஸ் ‘சுத்திகரிக்கப்பட்டு’ புதுப்பொலிவுடன் எப்போது உருவாகும்...? என்ற கேள்விகளுக்கெல்லாம் விடை கிடையாது.

இன்றைய சூழலில் மிகவும் சிரிப்புக்கிடமாகத் தெரியும் இத் திட்டத்தை, காங்கிரஸ் மௌனமாக, ஆரவாரமின்றிச் செயல்படுத்தி வெற்றிகாண முடியுமானால் வரவேற்கலாம்.

ஆனால் அப்படி நடக்கப் போவதில்லை என்று அரசியல் அரிச்சுவடி அறிந்தவர்களுக்குக் கூடத் தெரியும். ஊழலிலேயே பிறந்து, ஊழலிலேயே புரண்டு, கொழுத்து வரும் காங்கிரஸ் தலைவர்களில் யார்; எப்படி, யாரிடம் தூய்மையை வலியுறுத்தி வெற்றி காண முடியும்?

ஐக்கிய முன்னணி ஆட்சிக்கான ஆதரவை விலக்கிக் கொள்வதாக பூச்சாண்டி காட்டுவதில்தான் இப்போதைக்கு கேசரிக்கும் காங்கிரசுக்கும் நாட்டம் அதிகமாயிருக்கிறது.

இந்த பூச்சாண்டி போக்கைக் காட்டிலும் ஆதரவை விலக்கிக் கொண்டு தேர்தலுக்கு வழிவகுப்பதை வரவேற்கலாம். அந்த நேர்மையைக் கடைப்பிடிக்கும் தைரியம் கூட காங்கிரஸுக்கு இல்லை.

அதிகமாக வீண் செலவு செய்வது ஆண்களா? பெண்களா? — இந்த வாரம் ஒரு கணவனும், மனைவியுமே நேரடியாக மோதிக் கொள்ளுகிறார்கள்.

# அதிகமாய் வீண் செலவு செய்வது ஆண்களா? பெண்களா?

**மனைவி (அமுதா):** வீண் செலவுன்னாலே அது ஆண்கள் சம்பந்தப்பட்ட விஷயம்தான். இன்றைக்கு சிகரெட் பிடிக்காத ஆண்கள் நாட்டில் எத்தனை பேர் இருக்காங்க? சிகரெட் செலவு என்ன ரொம்ப அத்தியாவசியமான செலவா? சிகரெட் என்ன சாப்பாடா? இல்லா விட்டால் உயிர் போயிடுமா? நாட்டுல விற்பனையாகிற கோடிக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள சிகரெட்டுக்கான செலவு வீண் செலவு தானே?

**கணவன் (பரந்தாமன்):** அப்படிப் பார்த்தால், மார்னிங் ஷோ சினிமா கியூவுல நிற்கிறவங்க முழுக்க முழுக்க தாய்க்குலம்தான். 'தாய்மார்களோட வேண்டுகோளுக்கு இணங்க, தாய்மார்களின் ஆதரவு பெற்ற' என்றெல்லாம் சினிமா விளம்பரப் போஸ்டர்களில் போடறாங்களே! ஏன்? பெண்கள் தான் திரும்பத் திரும்ப ஒரே படத்தைப் போய்ப் பார்க்கிறாங்க. பெண்கள் தான் அதிகமாய் வீண் செலவு செய்யறவங்கங்கறதுதான் என் அபிப்ராயம்.

**மனைவி:** வீணாகச் செலவழிக்கவே பெண்களுக்கு மனசு வராது. ஆனால், ஆண்கள்தான், 'போனாப் போகுதுங்கிற மனப்பான்மையில பணத்தை அள்ளி வீசுவாங்க.

**கணவன்:** நான் ஒப்புக் கொள்ளவே மாட்டேன். புடைவை விஷயத்தையே எடுத்துக்குவமே! தேவைக்கு அதிகமா புடைவை வெச்சிக்கிற பெண்கள்தான் ஏராளம். அதுவும் வேலைக்குப் போகிற பெண்கள், வீட்டுல பீரோ முழுக்க - அது தேவையோ தேவையில்லையோ - புடைவைகளா வாங்கி அடுக்கி வெச்சிக்கிறாங்க.

**மனைவி:** ஏன்! ஆண்கள் பேண்ட், ஷர்ட் வாங்கிக்குறதுல மட்டும் என்ன குறைச்சல்? ஒரு ஜீன்ஸ் ஆயி



வேலைக்குப் போகிற பெண்கள், வீட்டுல பீரோ முழுக்க - அது தேவையோ தேவையில்லையோ - புடைவைகளா வாங்கி அடுக்கி வெச்சிக்கிறாங்க.

ரத்தைநூறு ரூபாய் விலை சொல்றான். ஆம் பிளைங்க வாங்கலையா என்ன?

**கணவன்:** ஆண்கள் வேஷ்டி, பாண்ட் சட்டை மட்டும்தான் வாங்கிக்கிறோம். ஆனா, பெண்கள் புடைவை மட்டுமா வாங்கிக்கறீங்க. சுரிதார், மிடீஸ், ஜீன்ஸ் என்று ஏகப்பட்ட டிரெஸ்களை விதம் விதமாய் வாங்கிக் குவிச்சுக்கறீங்க?

**மனைவி:** ஏன்... ஆண்கள் விதம் விதமா டீ ஷர்ட்ஸ் வாங்கறதில்லையா?

**கணவன்:** ஆயிரம் ஆயிரமா கொண்டு போய் பட்டுப் புடைவையில கொட்டுறது நீங்கதானே?

**மனைவி:** எந்தக் கடைக்குப் போய் வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்க! யார், அதிகமா பேரம் பண்ணி, பொருட்களை வாங்கறாங்கன்னு? பெண்களுக்குத்தான் பேரம் பேசற திறமை அதிகம்! வீண் செலவாளியா இருந்தா, கேட்கிற காசைக் கொடுத்துட்டு, விரும்பற பொருளை வாங்கிட்டு வர மாட்டமா? செலவைக் குறைக்கத்தானே பேரம் பண்றோம்!

**கணவன்:** பேரம் பண்ணுவதைப் பத்தியே நான் பேசலை. செய்யற செலவே வீண். அப்புறம் அதுல என்ன பேரம்?

**மனைவி:** பொது இடங்களில் பார்த்தா, வெட்டித்தனமா, பைக்கை வச்சிக்கிட்டு, கார் வெச்சிக்கிட்டு ஊர் சுத்துற பையன்களைத் தானே பார்க்கிறோம்! கும்பலா நின்று அரட்டை அடிக்கிற பெண்கள் கூட்டத்தை எங்காவது நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?

**கணவன்:** கும்பலா அரட்டையடிக் கிறதுக்கும் வீண் செலவுக்கும் என்ன சம் பந்தம்?

**மனைவி:** கும்பல், அரட்டையின்போது, வெறுமே பேசிக் கொண்டிருப்பதில்லை; பான்பராக், சிகரெட், கூல் டிரிங்க்ஸ் என்று செலவு பண்ணுவார்களா இல்லையா? அது வீண் செலவுதானே! உங்க ஆபீஸ்ல நடந்தது ஒரு விஷயம் சொன்னீங்களே! அதை இங்க சொன்னா பொருத்தமா இருக்கும்.

**கணவன்:** என்ன அது?

**மனைவி:** உங்க நண்பர்களில் ஒருத்தர் புது செருப்பு வாங்கினாருன்னு சொல்லி, அவர்கிட்டே 'டிரீட்' வாங் கிட்டீங்களா இல்லையா? செருப்பு விலை இருநூறு ரூபாய். அன்னிக்கு உங் களுக்கெல்லாம் கூல் டிரிங்க்ஸ் செலவு எழுபது ரூபாய்! இது வீண் செலவா இல்லையா?

**கணவன்:** இப்ப, பெண் கள் நிறைய பேர் வேலைக் குப் போறாங்க. அதனால கைல பணப் புழக்கம் அதி கமா இருக்கும். அதனாலயே ஊதாரித்தனமா செலவும் பண்ணறாங்க. என் ஆபீஸ்ல ஒரு பெண்மணி நானூறு ரூபாய்க்கு ஒரு ஹாண்ட் பேக் வாங்கினார். நானூறு ரூபாய் கொடுத்து ஹாண்ட் பாக்! வாவ்! அது போகட் டும். பொதுவா வீட்ல இருக்கிற பாத்திரங்களை எடுத்துக்கலாமே! கடைக் குள்ள நுழைஞ்சு புதுசா ஏதாவது ஒரு பாத்திரம் கண்ணுல பட்டுட்டா போதும்! உடனே அது அவ சியமா? இல்லையான்னு எல்லாம் யோசிக்கறது இல்லை. உடனே வாங்கிட வேண்டியது. அதைப் பத்தி ஏதாவது கேட்டா,

ஆண்கள் பேண்ட், ஷர்ட் வாங்கிக் குறதுல மட்டும் என்ன குறைச்சல்? ஒரு ஜீன்ஸ் ஆயிரத்தை நூறு ரூபாய் விலை சொல்றான். ஆம் பிளைங்க வாங் கலையா என்ன?



## அருள்வாக்கு



நவராத்திரியில் பராசக்தியான துர்க்கா பரமேசுவரியையும், மகாலக்ஷ்மியையும், ஸரஸ்வதி தேவியையும் பூஜிக்கிறோம். மூன்று மூர்த்திகளாகச் சொன்னாலும், அத்தனையாகவும் இருப்பது ஒரே பராசக்திதான். இந்த உண்மையைத்தான் லலிதா ஸஹஸ்ர நாமம் பரதேவதையை வர்ணிக்கும்போது, அவளே சிருஷ்டி செய்பவள் (ஸ்ருஷ்டி கர்த்ரீ-ப்ரஹ்ம ரூபா), அவளே பரிபாலனம் செய்பவள் (கோப்த்ரீ - கோவிந்த ரூபிணீ), அவளே சம்ஹாரம் செய்பவள் (ஸம்ஹாரிணீ - ருத்ரரூபா) என்று சொல்கிறது. லலிதையாக, துர்க்கையாக இருக்கிற பராசக்திதான் மகாலக்ஷ்மியாகவும் ஸரஸ்வதியாகவும் இருக்கிறது. லக்ஷ்மி அஷ்டோத்திரத்தில் 'பிரம்ம விஷ்ணு சிவாத்மிகாயை நம:' என்று வருகிறது. சரஸ்வதி அஷ்டோத்திரத்திலும் இப்படியே 'பிரம்ம விஷ்ணு சிவாத்மிகாயை நம:' என்று வருகிறது. படைப்பு, காப்பு, அழிப்பு எல்லாம் செய்வது ஒரே சக்திதான் என்று இந்த நாமங்கள் நமக்கு நன்றாக உணர்த்துகின்றன. ஒரே பராசக்திதான் வெவ்வேறு வேஷங்களைப் போட்டுக் கொண்டு வெவ்வேறு காரியங்களைச் செய்கிறது. துர்க்கையாக இருக்கிறபோது வீரம், சக்தி எல்லாம் தருகிறது; மகாலக்ஷ்மியாகி சம்பத்துக்களைத் தருகிறது; சரஸ்வதியாகி ஞானம் தருகிறது.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.**

'அதெல்லாம் பொம்பளைங்க சமாச்சாரம்'னு எங்க வாயை அடைச்சிட வேண்டியது.

***மனைவி:*** வாங்குகிற பாத்திரங்களை பத்திரமா உள்ளே வெச்சிடறது இல்லையே! பயன்படுத்தறோமே. அப்பப்ப புதுசு புதுசா உபயோகமான ஐட்டங்கள் மார்க்கெட்ல வருதே!

***கணவன்:*** எல்லாம், முதல்ல பார்க்கிறபோது ஏற்படற பிரமிப்புல வாங்குறது. எத்தனை வீடுகளில கேக் செய்யற Oven, வாக்குவம் கிளீனர், ஃபுட் ப்ராஸஸர் போன்ற வீட்டு சாதனப் பொருட்கள் எல்லாம் பயன்படுத்தாமலோ அல்லது ஆடிக்கு ஒருநாள் அமாவாசைக்கு ஒரு நாள் பயன்படுத்திக்கிட்டோ இருக்கிறாங்க?

***மனைவி:*** அதெல்லாம் பெண்கள் தன்னிச்சையா முடிவெடுத்து வாங்கறதில்லையே! கணவன்மார்களையும் கலந்தாலோசிச்சு, அப்புறம்தானே வாங்கறாங்க? இதுக்கு பதில் சொல்லுங்க. இன்னிக்கு ஒரு நம்பர் லாட்டரி கடையில் ஆண்கள்தானே கும்பல் கும்பலா இருக்காங்க. சம்பாதிக்கிற பணத்தை லாட்டரி சீட்டைச் சுரண்டியே இழக்கறாங்க. ஒரு நம்பர் லாட்டரி சுரண்டற பெண்களை எங்கேயாவது பார்த்தது உண்டா?

***கணவன்:*** அது சரிதான்! ஆனால் எதிர் வீடு, பக்கத்து வீடு, ஆபீஸ் என்று மற்ற பெண்களைப் பார்த்து, தானும் அதேபோல வாங்கிக்க ஆசைப்பட்டு பணம் செலவழிக்கிற பெண்கள் நிறைய உண்டு. அது தனக்கு அவசியமா, இல்லையா என்று யோசிப்பதே கிடையாது. அவங்க வைச்சிருக்காங்க... நமக்கும் வெச்சிக்க வசதி இல்லையா என்ன? நாமும் வாங்கிப்போம் என்று வாங்கிவிட வேண்டியதுதான். அதுதான் இன்றைய பெண்களுடைய போக்கு.

***மனைவி:*** ரேஸ் கோர்ஸ் போய் ரேஸ் ஆடறது ஆண்களா? பெண்களா? ரேஸுக்குப் போன குடும்பத் தலைவர்களால சீரழிஞ்சு போன குடும்பங்கள் எத்தனை எத்தனை? ரேஸ் பைத்தியம் புடிச்சு அலையறதுனால வீணான செலவா? உருப்படியான செலவா?

***கணவன்:*** ரேஸ் கோர்ஸ் வந்து பாரு! பெண்களும் அங்கே வருவது தெரியும். இன்னைக்கு டெலிவிஷன்ல வருகிற விளம்பரங்கள் பெரும்பாலும் குடும்பத் தலைவிகளைக் கவருகிற மாதிரிதானே காட்டப் படுகின்றன. எதைக் கண்டாலும் ஆண்கள் வாங்கி விடுகிறார்கள் என்றால், விளம்பரங்கள் எல்லாம் ஆண்களைக் கவருகிற மாதிரி தானே இருக்க வேண்டும்! ஆக, வீண் செலவு என்றாலே நினைவுக்கு வருபவர்கள் பெண்கள்தான்.

***மனைவி:*** ஒப்புக்கவே முடியாது. சுரண்டல் லாட்டரிக் கடை, ஒயின் ஷாப், பீடா கடை, பெட்டிக் கடை இங்கேயெல்லாம் போய்ப் பார்த்தால், ஊதாரிச் செலவு செய்வதில் ஆண்களுக்கு நிகர் ஆண்களே என்பது சந்தேகத்துக்கு இடமில்லாமல் நிரூபணம் ஆகிவிடும்.

தொகுப்பு: **கௌதம்**

படங்கள்: **ஸ்ரீஹரி**

A UNIT OF
HARI
AGENCIES

# மாமி, அவர் ஆபீஸிலிருந்து வந்ததும் சாவிய அவர்கிட்ட கொடுத்துடுங்க !



போகும் போது எங்க போறேன்னு கேட்கக் கூடாது ... இருந்தாலும்...

நீங்க கேட்கறதுக்கு முன்னாடி நானே சொல்லிடறேன் மாமி ! மயிலாப்பூர் லஸ் கார்னரில் இருக்கும் ஹரிப்பிரியாவுக்குத் தான் போறேன். ஹரிப்பிரியா பெண்களுக்கான பிரத்யேக ஆடை உலகம். அங்கே பெட்டிகோட்ஸ், கரிதார்கள், பேண்டீஸ், பிராக்கள், நைட்டீஸ், மாக்ஸிகள், கைக்குட்டைகள் எல்லாம் ஏராளமான வகைகள் தாராளமாக கிடைக்கிறது.



நம்ம பட்ஜெட்டுக்கு தகுந்தாப்ல வாங்கணும்னா ஹரி ஏஜென்சியோ, அங்கமான ஹரிப்பிரியா மட்டும் தான் போகணும்.

சித்த நாழி இருக்கியா ? நானும் கதவை பூட்டிண்டு பக்கத்தாத்தில சாவிய கொடுத்துட்டு வந்திடறேன்.




## ஹரிப்பிரியா

பெண்களுக்கான பிரத்யேக

ஆடை உலகம்

111, முதல் மாடி, கச்சேரி சாலை,
சென்னை - 600 004.
போன் : 4942368.

# ஸ்விஸ் வங்கிகளில் இனி ரகசியம் இல்லையா?

**பா**கிஸ்தான் அரசின் வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு, அதன் முன்னாள் பிரதமர் பெனாசிர், அவரது கணவர், தாய் ஆகிய மூவரின் ஸ்விஸ் வங்கிக் கணக்குகளையும் இனி இயங்க விடாமலிருக்க (ஃப்ரீஸ் செய்ய) ஸ்விட்சர்லாந்து வங்கிகள் ஒத்துக் கொண்டிருக்கின்றன.

ஆச்சரியம்! ஸ்விஸ் வங்கிகளின் இமேஜில் இப்படி ஒரு மாற்றமா? "யார் வேண்டுமானாலும் தங்கள் பணத்தை ஸ்விஸ் வங்கிகளில் போடலாம். அது கடைசி வரை வேறு யாருக்கும் தெரியாமல் ரகசியமாகப் பாதுகாக்கப் படும்" - இப்படி நம்பி அவற்றில் தங்கள் 'கறை படிந்த' சொத்துக் களைப் போட்டு வைத்திருக்கும் பல்வேறு நாடுகளைச் சேர்ந்த (இந்தியா உள்படத்தான்) அரசியல் வாதிகள், தொழிலதிபர்கள் போன்ற வி.ஐ.பிக்களுக்கு இப்போது காய்ச்சல் கண்டிருந்தால் வியப்பில்லை.

ஒரு வருடத்திற்கு முன்பே இந்த மாறுதலுக்கான அஸ்திவாரம் இடப்பட்டு விட்டது. தங்கள் கணக்குளை ஒரு பாரபட்சமற்ற சர்வதேசக் குழு சோதனை செய்ய ஸ்விஸ் வங்கிகளின் கூட்டமைப்பு ஒத்துக் கொண்டது.

ஆனால் சோவியத்தின் இரும்புத்திரை போல ஸ்விஸ் வங்கிகளின் ரகசியத்திரை ஒன்றும் முழுவதுமாகக் கிழிந்து விடவில்லை. யூதர்களின் வங்கிக் கணக்குகளுக்கு மட்டும் தான் இப்படி ஒரு திறந்த ஆய்வுக்கு அனுமதி.

இரண்டாம் உலகப் போரின் போது, தோற்றுவிடுவோம் என்ற நிலையில் ஜெர்மனி அரசு தன் நாட்டினருக்கு ஒரு சலுகையை அளித்தது. அதுவரை வேறு எந்த வெளிநாட்டுக்கும் தங்கள் முதலீட்டை மாற்றிக் கொள்ளக் கூடாது என்று விதித்திருந்த தடையை நீக்கிக் கொண்டது.

யூதர்கள் தங்கள் செல்வத்தை நம்பி ஒப்படைக்கத் தேர்ந்தெடுத்தது ஸ்விஸ் வங்கிகளைத்தான். ஸ்விட்ஸர்லாந்து நடுநிலை நாடாக இருந்தது முதல் காரணமென்றால், அதன் வங்கிகளில் ரகசியம் பாதுகாக்கப்படும் என்பது மற்றொரு காரணம். (1934ல் இயற்றப்பட்ட ஸ்விஸ் நாட்டு சட்டப்படி எந்த வங்கி ஊழியராவது தங்கள் வங்கியின் வாடிக்கையாளர் இவர் என்று வெளிப்படுத்தினால் அவருக்கு சிறை வாசம் நிச்சயம். இந்த சட்டம்தான் இதுவரை ஸ்விஸ் வங்கிகளுக்கு ஒரு 'கேடய' இமேஜைக் கொடுத்து வந்திருக்கிறது.)

ஆனால் பல யூதர்கள் உலகப் போரில் இறந்துவிட அவர்களது பணமெல்லாம் ஸ்விஸ் வங்கிகளில் அடக்கமாகி விட்டன. உதாரணமாக ஹாலந்தில் குடியேறிய ஒன்றரை லட்சம் யூதர்களில் ஒரு லட்சம் பேர் போரில் உயிரிழந்தனர்.

ஹானன் கிரீன்பெர்க் என்ற நான்கு வயதுச் சிறுமியிடம் அவளது தந்தை "கவலைப்படாதே. உனக்காக நான் கொடுக்க வேண்டிய சீரையெல்லாம் ஸ்விஸ் வங்கியில் போட்டிருக்கிறேன். போர் முடிந்தவுடன் நீ அதைப் பெற்றுக் கொள்ளலாம்" என்று கூறிவிட்டு இறந்து விட்டார். பல வருடங்களுக்குப் பிறகு அந்தப் பெண் ஸ்விஸ் வங்கிக்கு நடையாய் நடந்தது தான் மிச்சம். 'வாரிசுச் சான்றிதழ் சரியில்லை' என்பது போன்ற சாக்குபோக்குகளைச் சொல்லி இன்றளவும் தட்டிக் கழித்து வருகிறது வங்கி.

இப்படி லட்சக்கணக்கான வாரிசுகளின் சுட்டுவிரல்கள் ஸ்விஸ் வங்கிகளை நோக்கி நீள, அந்த வங்கிகளின் நம்பகத் தன்மை சர்வதேச அரங்கில் குறையத் தொடங்கின.

இதனால் பல வி.ஐ.பிக்கள் தங்கள் செல்வத்தைக் குவிக்கத் தயங்குவார்களோ என்ற பயத்தில் ஸ்விஸ் வங்கிகள் "உலகப் போர் கால கட்டத்தில் துவங்கப்பட்ட யூதர்களின் கணக்கு வழக்குகளை மட்டும்" ஒரு சர்வதேசக் குழு சோதனை செய்து பார்க்க ஒத்துக் கொண்டது. இப்போது பெனாசிர் கணக்குகளை ஃப்ரீஸ் செய்ய அவை ஒத்துக் கொண்டிருக்கின்றன என்றால் அவருக்குத் தங்களிடம் கணக்கு இருப்பதை வெளிப்படையாகத் தெரிவித்து விட்டதாக அர்த்தம். இது ஸ்விஸ் வங்கியின் வழக்கமான செயல்பாட்டுக்கு முரணானது.

இது ஒருபுறமிருக்க, 'பெனாசிருக்கு ஸ்விஸ் வங்கியில் கணக்கா?' என்றும் யாரும் ஆச்சரியத்தில் வாய் பிளந்ததாகத் தெரியவில்லை.

— ஜி.எஸ்.எஸ்.




# தீபாவளிப் பரிசு
# ஸ்ரீராம் டிரஸ்ட் வழங்கும்



# மகத்தான முதலீட்டுத் திட்டம்!

**ரூ.10,000 முதலீடு செய்யுங்கள்.**
**5 ஆண்டுகளில் ரூ.20,000 (இரு மடங்கு) பெற்றுக் கொள்ளுங்கள்.**

**அத்துடன் 4 இலக்கியப் பொக்கிஷங்களையும் அன்பளிப்பாகப் பெறுங்கள்**

21.10.97க்குள் டெபாசிட் தொகை அனுப்புபவர்களுக்கு மட்டுமே 'அமுதசுரபி' 'கல்கி' – 1997 ஆம் ஆண்டின் தீபாவளி மலர்கள் அனுப்பப்படும். பிறகு வரும் டெபாசிட்களுக்கு 5 ஆண்டுகளுக்குத் தொடர்ந்து இதழ்களும் 1998லிருந்து 5 ஆண்டுகளுக்குத் தீபாவளி மலர்களும் கிடைக்கும்.

1. 'கல்கி' வார இதழ் 5 ஆண்டுகளுக்கு (260 வாரங்களுக்கு) உங்கள் இல்லம் தேடி வரும்.
2. 'கல்கி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்கு பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.
3. பொன்விழாக் காணும் 'அமுதசுரபி' இலக்கிய மாத இதழ் 5 ஆண்டுகளுக்கு உங்கள் இல்லம் தேடி வரும்.
4. 'அமுதசுரபி' தீபாவளி மலர் 5 ஆண்டுகளுக்குப் பதிவுத் தபாலில் உங்களுக்குக் கிடைக்கும்.

ரூ. 10,000 (ரூ. பத்தாயிரம்) 'ஸ்ரீராம் டிரஸ்ட்' பெயருக்கு செக் / டிராப்ட் அனுப்ப வேண்டிய முகவரி:

'ஸ்ரீராம் டிரஸ்ட்', ஏ–7, இரண்டாவது அவென்யூ, அண்ணாநகர் கிழக்கு,
சென்னை – 600 102. தொலைபேசி எண்: 628 68 96  628 78 79

1. முழுப்பெயர்: திரு / திருமதி / செல்வி.................................
   முகவரி:.................................................
   .................................................
   .................................................
2. கூட்டாக இடப்பட்டால் அவர்கள் பெயர்:
   முழுப்பெயர்:.................................................
3. வாரிசுதாரர்:.................................................
4. கல்கி , அமுதசுரபி இதழ்கள் அனுப்பப்பட வேண்டிய முகவரி:.................................
   .................................................
   .................................................

CHEQUE / D.D.No.  DT.  ON

இடம் .................................  அன்புள்ள

தேதி .................................  முதலீட்டாளர் கையொப்பம்

# 5

இதுவரை நான் வெளியே சொல்லாத ஒரு விஷயத்தை இப்போது சொல்கிறேன். வீரப்பனைப் பார்க்கிற விஷயத்தில் நான் சந்தித்திருக்கிற தோல்விகள் - அதிரடிப்படையினருக்கு ஏற்பட்டதை விட அதிகம். வீரப்பனைப் பார்த்துவிட்டு வந்த விஷயம் மட்டும் தான் செய்தியாக வரும்; பரபரப்பாகும். ஆனால் ஒருமுறை நான் அவனைச் சந்திப்பதற்குள் சுமார் பத்துமுறை தோல்வியுற வேண்டி வரும். இதுவரை ஒன்பது முறை நக்கீரன், வீரப்பனைச் சந்தித்திருக்கிறது என்றால் கிட்டத்தட்ட தொண்ணூறு முறை அந்த முயற்சியில் தோல்வியைத் தழுவியிருக்கிறது!

ஏன் தோல்வி? காரணம் இருக்கிறது.

வீரப்பனைச் சந்திப்பதற்கு முன் நாலு கண்டங்களைத் தாண்டியாக வேண்டும். நான்கு வெவ்வேறு 'தொடர்பாளர்'கள் மூலம் தான் அவனை அணுக முடியும்.

முதல் கட்டம் - காட்டை ஒட்டியுள்ள ஏதாவது ஒரு நகரத்தில் உள்ள முதல் ஏஜெண்ட். அவரை அணுகியதும் அவர் ஒரு கிராமவாசியை அடையாளம் காட்டி, அனுப்புவார். அந்தக் குறிப்பிட்ட கிராமத்தை நெருங்கும் வரைதான் நம் முயற்சிகள். பிறகு அந்த கிராமவாசி, ஒரு காட்டுவாசியிடம் நம்மைக் கூட்டிப் போவார். காட்டுவாசி மூலமாக வீரப்பனின் நேரடி உதவியாளர்களை அணுக முடியும். அவர் மூலம்தான் வீரப்பனைப் பார்ப்பது.

இந்த 'ரூட்' எப்போதும் ஒரே மாதிரி இருப்பதில்லை. ஒவ்வொரு முறையும் வெவ்வேறு நகர எல்லைகள், வெவ்வேறு கிராமங்கள், வெவ்வேறு ஏஜெண்டுகள் என்று வீரப்பன் உலா வரும் பிரதேசத்துக்கேற்ப நமது 'ரூட்'டும் மாறிக் கொண்டே இருக்கும். மேலும் ரூட்டைப் பிடித்துவிட்டால் மட்டும் போதாது. ஓரிடத்திலிருந்து அடுத்த கட்டத்தை அடைவதில் சிக்னல் குளறுபடி ஏதும் நேர்ந்து, நாம் சென்றடைவதில் சிறு தாமதம் நேரிட்டாலும் ஆட்கள் பதுங்கி விடுவார்கள். முயற்சி வீணாகிவிடும். சொன்ன நேரத்தில் அரை விநாடி கூட முன்னோ, பின்னோ செல்லக் கூடாது. காரணம், கிராமவாசிகளுக்கு இருக்கிற போலீஸ் கெடுபிடி. அவர்களைக் கொஞ்சம் சந்தேகப் பட்டாலும் தீர்ந்தது விஷயம். போலீஸ் அவர்களைச் சந்தேகப்படுவது ஒருபுறம் இருக்க, யாராவது கிராமவாசியோ, காட்டுவாசியோ நம்மைச் சந்தேகப் பட்டாலும் போச்சு.



தேர்தல் முடிவு வந்தவுடனே, நான் என் முயற்சியைத் தொடங்கி விட்டேன். சிவா ஒருத்தரைத் தவிர என் அலுவலகத்திலேயே கூட நான் காட்டுக்குப் போக முயன்று கொண்டிருக்கிற விஷயம் யாருக்கும் தெரியாது. மூன்று முறை கிராம எல்லை வரை சென்று சரியான சிக்னல் கிடைக்காமல் திரும்ப வேண்டி நேர்ந்தது. எங்கே போனாய் என்று யாராவது கேட்டால் பொய்க் காரணம்

சொல்ல வேண்டி வந்தது.

# ‘நக்கீரன்’ கோபால்

நாலாவது முறை. எப்படியும் இம்முறை தவறவிடக் கூடாது என்று முடிவு செய்து, ஈரோடுக்கு ரயில் ஏறினேன்.

ஈரோடு ஜங்ஷனுக்கு வெளியே சிவசுப்பிரமணியனைச் சந்திப்பதாக ஏற்பாடு. ஆனால், ஸ்டேஷனில் யாராவது என்னைப் பார்த்து விட்டால் 'வீரப்பனைப் பார்க்கத்தான் கோபால் வந்திருக்கக் கூடும்' என்று யூகித்து, விஷயம் பரவிவிட்டால்?

அதனால் அவுட்டரிலேயே இறங்கி, நடந்து போய் சிவாவையும் அழைத்துக் கொண்டு கிளம்பினேன்.

டூ வீலரில் அறுபது கிலோ மீட்டர் பயணம். அங்கே ஒரு கிராமத்தில் ஹால்ட். எனக்கு சிக்னல் தரப்பட்டிருந்த ஒரு வீட்டை அடைந்து, இறங்கியவுடனே இரண்டு பேர் தபதபவென்று ஓடி வந்து பைக்கைப் பிடுங்கிக் கொண்டு ஓடினார்கள். சில விநாடிகளில் அந்த பைக்கின் மேல் ஒரு வைக்கோல் போர் முளைத்து விட்டது!

நாலைந்து குடிசைகள் மட்டும் அருகருகே இருந்த அந்த இடத்தில் ஒரு வீட்டு வாசலில் நாங்கள் செருப்பைக் கழற்றிவிட்டு உள்ளே போனோம். மயும் உப்புமாவும் கொடுத்தார்கள். காட்டுக்குள் நுழைந்து திரும்பும்வரை இனி எப்போது உணவு கிடைக்குமோ? திருப்தியாகச் சாப்பிட்டேன். இருட்டும் வரை காத்திருந்தேன். கிளம்பும் நேரமாகிவிட்டதை கிராமவாசி அறி

வித்ததும் வெளியே வந்தேன். என் செருப்பைக் காணோம்! அங்கிருந்த ஒரு கிழவியிடம், "பெரியம்மா, இங்க செருப்பு விட்டிருந்தேனே..." என்றபோது, அவர் அவசரமாக ஒரு கோழிக் கூடையை விலக்கி "இதுவா பாருங்க?" என்றார்.

நான், நடையில் அவிழ்த்து விட்ட செருப்பு எப்போது, எப்படி கூடைக்குள் போய் ஒளிந்து கொண்டது?

அந்தப் பெரியம்மா ரகசியக் குரலில் சொன்னார்: "தம்பி, இங்க ரோந்துன்னு போலீசுக்காரனுவ அடிக்கடி வருவானுக. புதுசா ஒரு செருப்பு அவனுக கண்ணுல பட்டா பிரச்னை ஆயிரும். அதான், நீ பேசாம கிளம்பு!"

நான் ஆச்சர்யப்பட்டேன். படிப்பறிவு இல்லாத இந்த கிராமத்துக்கு கிழவிக்கு எத்தனை சமயோசிதம்! அந்த ஒரு முறை அல்ல; ஒவ்வொரு முறையும் தம் சமயோசிதக் காரியங்களால் என்னை வியப்பிலாழ்த்தினார்கள், வெவ்வேறு கிராம மக்கள்.

நான் அந்தக் கிழவியிடம் கேட்டேன். "வீரப்பன் இங்கே வருவதுண்டா?"

"எப்பனாச்சும் வருவாருங்க. தண்ணி வாங்கிக் குடிப்பாரு. யார்கிட்டயும் வந்ததைச் சொல்ல வேணாம்னு சொல்லிட்டுப் போயிடுவாரு."

நான் கிளம்புகிற நேரம் ஒரு கிராமத்தான் அவசரமாக ஓடி வந்தான். அவன் கையில் ஒரு பிளேடு.



"ஐயா, சட்டுனு உங்க மீசையை எடுத்துருங்க."

தூக்கிவாரிப் போட்டது. வீரப்பனின் மீசையை விட என் மீசைக்கு வயசு ஜாஸ்தி. எப்படி எடுப்பேன்? அவன் மிகவும் வற்புறுத்தியும் நான் திடமானமாக மறுத்து விட்டேன். (சிவா மட்டும் அடையாளம் மறைப்பதற்காக மொட்டை அடித்திருந்தார்!)

கிராமவாசியுடன் கிளம்பினேன். காட்டு எல்லையில், ஒரு காட்டுவாசியிடம் விடப்

# ஜெய்!

பட்டேன். எங்கள் பயணம் அவனுடன் தொடர்ந்தது.

முதலில் இரண்டு கிலோ மீட்டர் மலைச்சரிவில் இறங்க வேண்டும். பின் 80 அடி செங்குத்தாக நின்ற மலையில் ஏற வேண்டும். அதே மாதிரி நாலு மலைகள் ஏறி, இறங்க வேண்டும். கையில் ஒரு டார்ச். ஆனால் அதை முன் குத்தினால் - எடுக்க மட்டுமே பயன் படுத்த வேண்டும். மற்றபடி, முகம் தெரியாத முழு இருட்டில்தான் நடக்க வேண்டும்.

இரவு முழுவதும் நடந்து கொண்டே இருந்தோம். அதிகாலை சோர்வு கவ்விய நேரம். சடாரென்று காட்டுவாசி எங்களைப் பிடித்து ஒரு புதரில் தள்ளி, 'உஷ்!' என்றான். ஏன்? என்ன ஆயிற்று?

சில விநாடிகளில் விடை கிடைத்தது! அருகே பர்கூர் மலைப் பாதையில் ஒரு ஜீப் விரைந்தது. அதில் நிறைய கமாண்டோக்கள்! அப்போதுதான் ஒரு சாலைப் பக்கம் வந்திருக்கி றோம். என்பதே புரிந்தது.

ஜீப் கடந்து, பதினைந்து நிமிடங்கள் ஆனதும் ஒவ்வொருவராக ராட்சஸப் பாய்ச் சலில் சாலையைக் கடந்து, மறுபடி புதர்களில் ஒளிந்து, மரங்களில் பதுங்கி நடக்க ஆரம்பித் தோம். அதிகாலை நேரத்தில் நிறைய பஸ்கள் அந்தப் பாதையைக் கடக்கும். சன்னலிலிருந்து யாராவது பார்த்தாலும் போச்சு. ஆகவே மரங் களின் அடியில் தவழ்ந்தபடியே கொஞ்ச தூரம் போக வேண்டியிருந்தது.

போதாக்குறைக்கு, பத்து மணியானால் மரம் வெட்டும் ஆட்கள் வரத் தொடங்கி விடுவார் கள். அதற்குள் ஒரு குறிப்பிட்ட எல்லையைத் தாண்டி விட வேண்டும் என்று காட்டுவாசி சொல்லியிருந்தான்.

மணலில் செருப்புத் தடம் தெரியக் கூடாது என்பது முக்கியமான கண்டிஷன். புல்லின் மீது தான் நடக்க வேண்டும். தவிர்க்க முடியாமல் மணல் பரப்பில் கால் பட்டுவிட்டால் உடனே அந்தக் காட்டுவாசி எச்சரிப்பான். அப்படியும் முடியாமல் போனால் மரக்கிளையை ஒடித்து, மண்ணோடு இழுத்துக் கொண்டே வருவான். தடம் அழிந்து விடுவது ஒருபுறம் இருக்க, யாரோ சுள்ளி இழுத்து போனதாகத்தான் கருதத் தோன்றும்.

இத்தனை எச்சரிக்கைகளுக்குக் காரணம் - காடு முழுவதும் மரம் வெட்டுபவர்கள் ரூபத் தில் போலீஸ் இன்ஃபார்மர்கள் திரிவதுதான். யாராவது ஓர் ஆள் தடத்தைப் பார்த்துவிட்டுத்

## யாருக்கு வேண்டும் சிலை?



● உலகில் தயாரிக்கப்பட்டுள்ள கடிகாரங் களில் மிகச் சரியாக நேரம் காட்டும் கடிகாரம் அமெரிக்க கடற்படை ஆராய்ச்சிக் கூடத்தில் உள்ளது. இந்தக் கடிகாரம் சுமார் 17 லட்சம் வருடங்களில் ஒரே ஒரு விநாடிதான் நேரக் குறைபாடுடையதாக இருக்கும்!

உலகின் மிகச் சிறிய கடிகாரம் சுவிட்சர் லாந்தில் உருவாக்கப்பட்டது. 1.2 சென்டி மீட்டர் நீளமும் 0.476 சென்டி மீட்டர் அகலமும் கொண்ட இந்த கடிகாரத்தின் எடை ஏழு கிராம் மட்டுமே!

ஆதாரம் : **'விஸ்டம்'**
தகவல் : **எஸ். ஆலன்**

● சீனாவிலுள்ள பி.எஸ்.ஏ. மருத்துவமனை யில் 9.5.97 அன்று ஒரு ஒன்பது வயதுச் சிறு வனின் மூளைக் கட்டியை ஒரு ரோபோ, வெற்றி கரமாக ஆபரேஷன் செய்து நீக்கியது. மேலும் சீனாவில் 6000 மீட்டர் கடலுக்கடியில் செல்லக் கூடிய ஆழ்கடல் ரோபோவைக் கண்டுபிடித் திருக்கிறார்கள். அது வடகிழக்கு பசிபிக்கில் கடல் ஆராய்ச்சிக்குப் பயன்படுகிறது.

**— இந்தியன் எக்ஸ்பிரஸ்**
தகவல் : பார்வதி

● நான் இறந்தபின் எனக்காகச் சிலை எழுப்பப் போகும் என் அன்பர்களே! உங்களை ஒன்று கேட்க விரும்புகிறேன். யாருக்கு வேண்டும் சிலை? உங்களைக் கெஞ்சுவதெல் லாம் இதுதான். தெய்வம் இல்லையென்று கூற வந்த என்னைத் தெய்வமாக்கி இழிவுபடுத்தா தீர்கள். என் நூல்களைப் படிக்காமலே என்னைப் புகழாதீர்கள். என் கருத்துக்களை உணராமல் என்னை அடிக்கடி மேற்கோள் காட்டாதீர்கள். உங்கள் இன்ப மாளிகையை என் இடிந்து சிதைந்த கல்லறை மீது எழுப்பாதீர்கள்.

இவ்வாறு கூறியவர் யார் தெரியுமா? சிலி நாட்டுப் புரட்சிக் கவிஞன் பாப்லோ நெருடா.

— பாளை பசும்பொன்

தகவல் தந்து விட்டால் கூட அவ்வளவுதான்! இத்தனை முயற்சியும் பாழ்!

22 கிலோ மீட்டர் நடந்திருப்போம். நிறைய பாறைகளும் சலசலக்கும் சுனையும் இருந்த ஓரிடத்திற்கு வந்து சேர்ந்தோம். கொஞ்சம் ஆசுவாசப்படுத்திக் கொள்ளலாம் என்று நினைத்து, அதற்கு முன் ஒரு ரவுண்ட் பார்வையைச் சுழல விட்டேன்.

சடாரென்று ஓர் உருவம். முகம் மட்டும் தான் - ஒரு பாறை இடுக்கு வழியே தெரிந்து மறைந்தது.

காட்டுக்குள் குரலை உயர்த்திப் பேசக் கூடாது. ஆகவே என் பயத்தை விழிகளில் தேக்கி, ரகசியக் குரலில் அலறினேன். "சிவா, யாரோ பார்த்துட்டாங்க."

சிவாவும் காட்டுவாசியும் அந்த உருவத்தைப் பார்க்கவில்லை. "இல்லண்ணே, யாரும் இல்லியே!" என்றனர்.

"இல்ல, நான் பார்த்தேன். நிச்சயம் ஒரு ஆள் அங்க இடுக்கு வழியா பார்த்தான். நீ போய்ப் பார்!" என்று காட்டுவாசியை வலுக்கட்டாயமாக அனுப்பிவிட்டு, நெஞ்சம் படபடக்கக் காத்திருந்தேன்.

போனவன் திரும்பி வந்து, "யாரும் இல்லை" என்று அறிவித்தான்.

என் கண் ஏமாற்றாது! பயந்தபடியே மேலே நடக்கத் தொடங்கினோம். 600 அடி உயர மலை. நேர் செங்குத்தான மலை. பிடிமானமே இல்லாமல் தடவித் தடவித்தான் ஏற வேண்டும். கரணம் தப்பினால் மரணம். ஒரு தைரியத்துக்கு உடன் வருபவருடன் பேச்சுக் கொடுக்கலாமென்றால் கூடவே கூடாது என்று இன்ஸ்ட்ரக்ஷன். மெல்ல ஏறிக் கொண்டிருந்தோம்.

ஓரிடத்தில் எங்களைப் பதுங்கி இருக்கச் சொல்லிவிட்டு, "இந்தா வரேன்" என்று போனான் காட்டுவாசி. போனவன், போனவன்தான்! இருபது நிமிஷம் ஆளையே காணோம்!

பயமும் பதற்றமும் பற்றிக் கொள்ள, என்னை ஒரு வழி பண்ணிவிடுகிற விதமாக அங்கே ஒரு காட்சி -

ஒரு சரிவுப் பாறையில் ஓர் ஆள் விளிலடித்தபடியே இறங்கிப் போவதைக் கண்டேன்! என் மூச்சு நின்றுவிடும் போலிருந்தது. யார் அவன்? வீரப்பன் ஆளா? போலீஸ் ஆளா? வெறும் காட்டுவாசியா? இடத்தை விட்டு அசையவில்லை நாங்கள். உடம்பெல்லாம் நத்தை அளவுக்குப் பெரிய காட்டு ஈ மொய்க்க, சகித்துக் கொண்டு ஒளிந்திருந்தோம்.

ஒரு வழியாக, காணாமல் போன காட்டுவாசி வேறு வழியில் திரும்பி வந்தான்.

"எங்கய்யா போயிட்ட? எவனோ ஒருத்தன் இந்தப்பக்கமா போனான். பயந்துட்டேன்!" என்றேன்.

"நான் பார்க்கலைங்க. போலீஸோ என்னவோ?" என்றான் சாதாரணமாக!

வெலவெலத்துப் போனேன்.

சரி, இனி கடவுள் விட்ட வழிதான் என்று ஒரு விதமாக மனத்தைத் தேற்றிக் கொண்டு மேலும் நடந்தோம்.

துல்லியமான ஒரு சரிவுப் பகுதியை அடைந்தோம். விநாடி பிசகினாலும் 600 அடி பாதாளம்!

அதை நான் எதிர்பார்க்கவே இல்லை. என் கண் முன்னே ஐம்பதடி உயரத்தில் சடாரென்று மின்னல் மாதிரி ஒருவன் தோன்றினான். அவன் கையில் துப்பாக்கி. குறி, என் நெஞ்சில்!

(தொடரும்)



## பந்திக்கு முந்து... படைக்குப் பிந்து...!

முன் காலத்தில் அரசர்களிடம் தற்கொலைப்படை இருக்கும். இதனை பந்திப்படை என்பர். இவர்கள் உயிருக்கு அஞ்சாமல்; எதிரியின் கூடாரத்தில் நுழைந்து சின்னா பின்னமாக்குவர். உயிர்த் தியாகத்துக்குத் தயங்க மாட்டார்கள். தன் வீரத்தை வெளிப்படுத்த இளைஞர்கள் பந்திப் படையில் சேரவே துடிப்பர். இதனால் பந்திக்கு முந்து; (மற்ற) படைகளுக்குப் பிந்து என்ற சொல்லாக்கம் தோன்றியது.

ஆதாரம் : மேடைத்துளிகள்

தகவல் : ராஜிராதா

ஆப்பிரிக்கப் பழங்குடியினரிடம் ஒரு விநோதப் பழக்கம் உள்ளது. மேடையில் பேச ஆரம்பிக்கும் போது ஒரு காலை உயர்த்திக் கொண்டே பேச வேண்டும். எப்போது அந்தக் கால் கீழே படுகிறதோ - உடனே அவர் பேச்சை முடித்து விட வேண்டும். இல்லை பேச்சை நிறுத்தச் சொல்லி "கட்டளை" கொடுக்கப்படும்! இதை நம்மூர் அரசியல்வாதிகளும் பின்பற்றினால் நன்றாயிருக்குமே!

தகவல் : காந்திராஜ்

### போட்டிக்கதை - 3

# உயில்

**நாராயணி கண்ணகி**

பயந்து சுருண்டு கொள்ளும் நாகமாய், நடுங்கும் நெஞ்சோடு உட்கார்ந்தேன். எழுபது வயதில் இப்படியெல்லாம் சோதனைகள் வரக் கூடாது. ஆனால் இப்படித்தான் வரும்.

பிரதாப்பின் சிவந்த கழுத்துப் பகுதியில் பச்சை நரம்புகளின் நுன்னிய அதிர்வுகளைப் பார்க்க முடிந்தது. அவனுடைய பார்வையை சந்திக்கும் தைரியம் இல்லாது போயிற்று. பாதி ஆஸ்தி இறக்கை முளைத்துப் பறந்து போய் விடுமோ என்கிற ஆத்திரம் அவனுக்கு. காதின் பின்புறமிருந்து வியர்வை நீர் சரேலென்று கழுத்து நரம்பை ஒட்டி இறங்கிற்று.

"அப்பா..." இருந்த நாக்கு ஈரத்தில் அழைத்தான். அடுத்து கரக்கப் போவது எல்லாமே திராவகம். குரலும் அனலாய் உயர்ந்து விடும்.

அறை எங்கும் ஒரு வினாடி மௌனம். தூக்குக் கயிற்றிற்குக் கீழ் மரண தண்டனைக்குக் காத்திருப்பது போல் அந்த ஒரு வினாடி மௌனம் விளாசிற்று.

"உங்க அருமை மகள் அனுப்பின வக்கீல் நோட்டீசுக்கு என்ன பதில் தரப் போறீங்க?"

எனக்குள்ளே உருகி நுழைந்து கொண்டேன். பெரிய லென்ஸ் கண்ணாடியை முகத்தில் வைத்துக் கொண்டு அலைந்து அலைந்து தேடினேன். கிடைக்கவில்லை பதில்.

"வீட்டோட மாப்பிள்ளையா வர்றவனுக்குக் கொடுக்கலாம்னு சொன்னேன். கேட்டீங்களா? பாசம், உறவுன்னு தங்கச்சி மகனுக்குத் தார வார்த்தீங்க... இப்போ கழுத்துக்குக் கத்தி. கொள்ளைக் கும்பலுக்கு பொன்னைக் கொடுத்தாச்சு. எல்லாத்தையும் அவனுக்கே எழுதிடுங்க; நாம நடுத் தெருவுக்குப் போயிடலாம்." உஷ்ணத்தைக் கொட்டினான்.

"எழுதறேன்னு சொன்னேனா?"

"சொல்லாம செய்திடுங்க. ஆசை மகனாச் சேப்பா, புகுந்த இடத்தில கண் கலங்கக் கூடாதுன்னு சொல்வீங்களே..."

பாசத்தை வைத்துக் கொண்டிருக்கும் நெஞ்சைப் பார்த்துக் குத்துகிற கூரான வார்த்தைகள்.

"ஏண்டா சும்மா புலம்பர... நான் சொத்தைத் தந்தால்தானே?"

"கோர்ட்ல கை விரிக்க முடியுமா? சொத்துல சம உரிமையாமே..."

வாயை இறுக்கிக் கொண்டேன். கோர்ட் பூதத்தைப் பற்றி அவ்வளவாகத் தெரியாது. தெரியாததைப் பற்றி பேசாமல் இருப்பது நல்லது. எழுபது வயதில் எதைப் பேசினாலும் நாய் குரைப்பதைப் போன்று கணக்காகி விடுகிறது. எதையும் பேசாமல் இருந்தாலும் எதிரானி என்கிற கணக்காகி விடும்.

தோட்டத்தில் வேலை செய்யும் பெருமாள் உள்ளே நுழைந்தான். தலையில் சுற்றியிருந்த முண்டாசை அவிழ்த்து இடுப்பில் சுற்றிக் கொள்ளும் பழமையோ, சினிமாத்தனமோ இல்லாத பணியாள்.

"தம்பி கரும்புக்குத் தண்ணி கட்டலாமா? சேடைக்கா?" - பெருமாள்சாமி நகத்தைக் கடித்துத் துப்பிக் கொண்டே கேட்டான். வீட்டுக்குள் நகத்தைக் கடிக்காதே என்று எத்தனையோ முறை சொல்லியாச்சு. அவன் கேட்டுக் கொண்டால்தானே? பெருமாள் சாமியும் பேரன், பேத்தி கண்டு விட்டான்.

"என்ன தம்பி கரும்புக்கா, சேடைக்கா?" மறுபடியும் கேட்டான்.

"எதுக்கோ கட்டு போ!" - முறை இல்லாமல் கோபமாய் சொன்னான் பிரதாப். நான் மௌனம் சாதித்தேன்.



"நாளைக்கு நான் வரலை தம்பி. வீட்ல ஒரு முக்கியமான வேலை."

"சுத்தமா வராமனாலும் நின்டுக்கோ, சொத்தே கையை விட்டுப் போகுது."

தொலைந்து போனவன் போல் மிரள மிரள என்னையும் பிரதாப்பையும் மாறி மாறி ஒரு பார்வை பார்த்துவிட்டு, கதவு பின்னாடி இருந்த மண்வெட்டியை எடுத்துத் தோளில் வைத்துக் கொண்டு ஏதும் புரியாதவனாய் வெளியே நகர்ந்தான்.

"உன் தங்கச்சியை வெட்டிப் போடறேன். என் தங்கச்சி வாழாமா வீட்டுக்குத் திரும்பினாலும் பரவாயில்லை. உன் தங்கச்சியை வெட்றேன். அவளோட தூண்டுதல்தான் இது."

கீழுதட்டை மடித்து கடித்துக் கொண்டான். கண்களை பெரிசாய் புடைத்து என்னைப் பார்த்தான். ஆத்திரம். அக்கினியாய் எரிகிற அவன் முகத்தை என்னால் பார்க்க முடியவில்லை. தலையைக் கீழே போட்டுக் கொண்டேன். பதில் பேசுவதில்லை என்கிற முடிவை அழுத்தி எடுத்தாயிற்று. ஆறுதலுக்காக என்று நான் எதையாவது பேசித் தொலைத்தாலும் ஆத்திரத்திலிருக்கும் அவனுக்குத் தப்பான அர்த்தமாய் வேகவைக்கும். வீட்டுக்குள் சுருங்கி உட்கார்ந்திருந்தாலும் பேச்சு விரிந்து கொண்டு போகும்.

குழந்தைக்குப் பால் சாதம் ஊட்டிக் கொண்டு, வாசற்படியில்



நின்றிருந்த மருமகள் 'சாப்பிட வாங்க' என்பது தாய் சைகை செய்தாள். பசிக்கவில்லை.

'உன் தங்கச்சியை வெட்டிப் போடறேன். என் தங்கச்சி வாழாம வீட்டுக்கு வந்தாலும் பரவாயில்லை'. பிரதாப் சொன்னதை காது நகரவிடாமல் வைத்துக் கொண்டு சுழன்று சுழன்று அதையே கூவியது.

என் தங்கச்சியும், என் மகளும் கண்களுக்குள்ளே வந்து நின்றார்கள். கரைந்தார்கள். வெடித்து வெடித்து அழுது விடுவேன் போலிருந்தது. நெஞ்சுக்குள்ளே முறுக்கிப் பிடித்த மாதிரி வலி.

எழுந்து கொண்டேன். வீட்டை விட்டு கூடாய் வெளியே வந்தேன். எங்கே போவது? கெட்டாலும் பிழைத்தாலும் இந்த கழுதைக்குத் தோப்புதானே.

எழுபது வயதிற்குள் சந்தித்த போராட்டங்கள், பிரச்னைகள் நிறைய. அரிசியோடு கலந்த உமியை ஊதுவது போல ஊதி விட்டிருக்கிறேன். எப்போதும் புத்தி சுறுசுறுப்பாய் இருந்துள்ளது. வெள்ளம் திடுக்காய்ப் புகுந்த மாதிரி, அவசரமாகவும், நல்லதாகவும் பிரச்னைகளுக்குத் தீர்வு கண்டு பிடித்து நடைமுறையாக்கி இருக்கிறேன். இப்போது இந்த பிரச்னையில் புத்தி தொலைந்து விட்டது. நானே தொலைந்தும் விட்டேன்.

"**நா**ராயணமூர்த்தி பொண்ணு பொறந்த நேரம் ரொம்ப நல்லா இருக்கு. குடும்பத்துக்கே வெளிச்சம் வீசப் போற அதிர்ஷ்ட விளக்கு! சுக்கிர திசை சுழன்று அடிக்குது. கூரையைப் பிய்ச்சி கொட்டப் போகுது."

"மழையா?"

"குழைஞ்ச வாய் பூராவும் உங்களுக்குக் கிண்டல்தானே... பஞ்சாங்கத்தில உள்ளதைத் தானே படிச்சிக் காட்டறேன். சினிமா வசனமா பேசறேன்?"

"பொண் குழந்தை பிறந்ததால சொத்து பத்து சேரும்னு ஆசை இல்லைய்யா... நாங்க ஜாதகம் பார்க்கறது, பொண்ணு நோய் நொடி இல்லாம தீர்க்காயுசா இருப்பாளான்னு தெரிஞ்சுக்கத்தான்."

"நல்லாருக்கு! ரொம்ப நல்லாருக்கு! அவளுக்கு மட்டுமில்லை. அவளால குடும்பம் மொத்தத்துக்கும் நல்லாருக்கு. அவ பேரைச் சொல்லி பிஸினஸ் ஆரம்பியுங்க. அவ கையால விதை போடுங்க. தொட்டது துலங்கும்."

லட்சுமி பிறந்ததும் ஜோதிடர் இரத்தின வேலு மாவடு சப்பினவராட்டம் வாய் ஊறச் சொன்னது. இடிக்க முடியாத நினைவு அடுக்குகளில் கால வெள்ளத்தாலும் கூட கரையாமல் அப்படியே தங்கி இருக்கிறது.

**பா**லாற்றை ஒட்டி இருபது ஏக்கர் நஞ்சை. கண்ணுக்கெட்டிய தூரமும் கரும் பச்சை. நெல், கரும்பு, வாழை, ஆற்றை ஒட்டி தென்னந்தோப்பு.

கம்ப்யூட்டர் கணிதம், போட்டி போட்டு வங்கி கொட்டும் வட்டி, சொகுசான நவீன வாழ்க்கை மோக மோகினி, இத்தனை இழுவைகளிலும் கழுந்துச் சிதறாமல் கை கால் துண்டாகாமல் பத்திரங்களோடு பத்திரமாய் உள்ள அசையா சொத்து.

மண்ணையும் வானையும் நம்ப முடியாத நெருக்கடி காலத்தில் - முப்பது வருடங்களுக்கு முன்பே - பலர், தோல் தொழிற்சாலைகளுக்கு நிலத்தை விற்று விட்டார்கள். எங்களுடைய இந்த இருபது ஏக்கர் நிலம் தவிர மீதி நாற்றமாய் நாறி விட்டது.

நிலத்தை விற்றவர்கள், விற்ற காலத்திலேயே கருவாட்டிற்கும் சிகரெட்டிற்கும் காசை காலி செய்து விட்டார்கள். பஸ் ஸ்டாண்டில் சோடாக்கடையும், மிட்டாய்க் கடையும் போட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

நிலத்தை விற்காமல் நெஞ்சோடு நெஞ்சாய் இறுக்கி வைத்திருந்தது. யாரும் பாராட்டவில்லையென்றாலும் என் கெட்டிகாரத்தனம். இன்று அதற்கு லட்சங்களில் மதிப்பு.

ஒரு காலத்தில் ஆறும் ஓடிற்று என்பதற்கான அடையாளமாய், ஆறு கோபித்து ஓடிப் போனதாகி விட, அதன் பாதச் சுவடுகளாய் மணற் பரப்பு. மணற்பரப்பையும் மேற்குப்புற தென்னந்தோப்பையும் ஒட்டி சிறிய பாறை உட்கார்ந்து கொண்டிருக்கிறது, என் சிம்மாசனம். கறுப்பும் வெளுப்பும் கலந்த எளிமை நிறத்தில் மொழு மொழு என்றுள்ளது.

கால்களை மடக்கி தவமாய் சிம்மாசனத்தில் உட்கார்ந்தேன்.

அடையாளமற்ற ஆற்றை, காய்ந்து போன ஈரமில்லா மனசு மாதிரி வறண்ட மணலை, பாவமென்று பார்க்கிற போது இந்த உலகில் பாசம், அன்பு, கருணை, மனிதம் என்று நல்ல விஷயங்கள் அத்தனையும் செத்துப் போனதாய் ஒரு துக்கம் என்னை உடைத்து உடைத்துப் போடுகிறது.

பாறை மீது - நகராத யானை மீது உட்கார்ந்தால் போதும், பழகும் புதுசும் சேர்ந்து பல ஞாபகங்கள்தான் வெள்ளப் பெருக்கெடுத்து ஓடுகின்றன. பழைய சந்தோஷங்கள் புதிய வேதனைகளைக் கிளறி கிளறி மேலும் ரணமாக்கும்.

சிறு வயது சந்தோஷங்களை நினைக்கும் போது மனத்தில் கோடி பூக்கள் பூக்கும், குலுங்கும்!

அப்போதைய வாணியம்பாடி வேறு, அப்போதைய வீடுகள் வேறு, அப்போதைய மனி

தர்கள் வேறு.

எந்தப் பொருளை ஈடு வைத்தாலும் பாசத்திடம் தோற்று மரணமுறும் காலம். இப்போதோ பாசத்தைக் கூட காசுதான் மதிப்பிடுகிறது.

எனக்கு பத்து வயதும், சங்கரிக்கு எட்டு வயதும். சங்கரியின் குஞ்சம் கட்டிய ஜடை, பூப்போட்ட சிவப்புப் பாவாடை, ஜலங்கு ஜலங்கு என்று ம்யூசிக் போடும் கொலுசு. நெற்றிச் சுட்டி, சிவப்பு தீபமாய் எரிகிற சாந்துப் பொட்டு. நினைவுகள் என்கிற அதன் சுழல் தேசத்தில் உருகாமல் நின்றிருக்கிற, காட்சிகள்!

ரொம்ப மரியாதையாய் 'கோபிண்ணா கோபிண்ணா.....' என்று குயில் மாதிரி கூவுவாள்.

எப்பவும் உப்பு மூட்டை தூக்கச் சொல்வாள். குண்டாய் அழகாய் மூட்டை மாதிரிதான் சிறுவயதில் இருந்தாள். தாமரையாய் மலர்ந்த முகம்.

இப்போது மல்லுக்கு நிற்கும் சங்கரிக்குத் தான் என்னமாய் முகம் மாறிவிட்டது. பார்க்க சகிக்கவில்லை. தோல் தொழிற்சாலைகள் அதிகமாகிவிட்ட பிறகு, ரணமும் நாற்றமுமாகிப் போன வாணியம்பாடி மாதிரியே தங்கையின் முகமும் பேயாகி விட்டது.

பழைய பாசங்கள் அவளுக்கு நினைவில் வருமா?

உக்கிரத்தோடு சொத்துக்காக நாக்கைச் சுழற்றுபவளுக்கு வசந்தத்தின் வாடையை நுகர்ந்தறிய முடியுமா?

'சங்கரி, நீ எதிரியானதோட இல்லாம என் மகனையும் எனக்கெதிரா திருப்பி விட்டிருக்கே..'

**வி**ளைச்சல் என்பதற்கான மரியாதை வலுகட்டாயமாக பறிக்கப் பட்டாயிற்று. பூரிப்பான இயற்கை பொய்த்து விட்டது. புண்ணிற்குத்தான் மருந்து போடுவார்கள். மருந்து போட்டு மருந்து போட்டு மண் புண்ணாகி விட்டது.

கரும்பு, நெல், மஞ்சள் எதற்கும் அதன் உண்மையான உயிர் அணு உள்ளிருக்கவில்லை. கருவாட்டின் உடம்பாய் சாரமற்று காணப்படுகிறது கரும்பு. கூலி கொடுத்தாலும் கரும்பு தின்ன முடியாது. அந்த காலத்து கரும்பில் ஒரு ருசியும் குழந்தையின் கன்னமாய் மென்மையும் இருக்கும். திரும்பவும் சுழன்று வராத காலம் மாதிரி எல்லாம் போய் விட்டது.

பாறை மீது உட்கார்ந்தாலே நினைவுகள் தான். அழுத்தமான பசுமை ஆர்ப்பரிக்கும். குரலெழுப்பும்.

தோல் தொழிற்சாலையின் கழிவு இரசாயனம் ஊறியதில் மண் வெந்து போனாலும் நிலத்திற்கு மதிப்பு அதிகம். இனி விளைச்சலா செய்யப் போகிறார்கள்? கசாப்புக் கடையில் ஆட்டை வெட்டிக் கூறு போடுவது போல் நிலத்தைக் கூறு போட்டு விற்கப் போகிறார்கள்.

**கடற்கரையே இல்லாமல் கடற்படை வைத்திருக்கும் ஒரே நாடு தென் அமெரிக்காவில் இருக்கும் பொலிவியா. ஒரு காலத்தில் அண்டை நாடான சிலியிடம் போரில் தோற்ற போது கடற்கரைப் பகுதிகளை இழந்து விட்டது பொலிவியா. எனினும் மீண்டும் அப்பகுதிகளை மீட்டுவிடுவோம் என்ற நம்பிக்கையில் கடற்படையைப் பராமரித்து வருகின்றது!**

**— பி.பி.சி. ஒலிபரப்பு**
**தகவல் : நா. ராஜேஷ்**

'**உ**னக்கு ஒரு பொண்டாட்டி வரட்டும், இருடா. தங்கச்சி பாசம் போகாம இருக்கா பார்க்கலாம்!' அம்மாவின் வார்த்தைகள் கல்வெட்டாய் நினைவுகளில்.

சங்கரிக்கு புருஷன் வந்தான். எனக்கு மனைவி வந்தாள்.

வயசாவதே தெரியாமல் வயசாகி விட்டது போல், கெட்டுப் போனதே தெரியாமல் கெட்டுப் போன மண் போல், உணர்வுக்கே வராமல் பாசத்திலும் வந்து விட்டது விரிசல்.

இருபது வருஷத்துக்கு முன்னே இதே பாறை மீது உட்கார்ந்திருந்தேன். மணலின் சூடு கால்களில் கொப்புளிக்க சங்கரி வந்தாள். முகம் முழுக்க கண்களும் கண்ணீரும்.

'என்னை கடைசியா ஒரு முறை பார்த்துக் கோண்ணா. இனிமே நான் இந்த வீட்டுப் பக்கம் வரலை.' வார்த்தையும் அழுகையும் இணைந்து நெஞ்சைக் கிழிக்கிறது என்னை. 'இங்கே எனக்கு எல்லா உரிமையும் போயாச் கண்ணா. வீடு கட்டும்போது நீ ரெண்டு செங்கல் தூக்கினா நான் ஒரு செங்கல் தூக்கி இருக்கேண்ணா. தாய் வீட்டை என் உயிரா மதிச்சேன். என் உயிர் போயாச்சண்ணா... இனிமே நான் ஒதுங்க நிழல் இல்லை.'

நெஞ்சம் ஊதி வெடிக்கிற மாதிரி துயறுற்றேன். பேச்சு வராமல் அடைத்தது. 'சங்கரி, என்ன ஆச்சு சொல்லு?' நொறுங்கிப் போன வார்த்தைகளால் கேட்டேன்.

'கட்டிக்க புடவை எடுக்கலாம்னு பீரோவைத் திறந்தேன். அண்ணி பறந்து வர்றாங்க. யாரைக் கேட்டு திறந்தேன்னு சத்தம் போடறாங்க. தப்புண்ணா தப்பு. என் வீட்ல நான் பார்த்து வைச்ச பீரோவைத் திறக்க எனக்கு உரிமை இல்லை!'

சங்கரிக்கு மழை மழையாய் கண்ணீர். நான், நானே கண்ணீராகிக் கொண்டிருந்த நிமிடங்



கள்.

'என் ஞாபகத்திலிருந்து போகலைன்னா... நாம ஓடிப் பிடிச்சி விளையாடினப்போ அந்த பீரோவுக்குள்ளேயே நான் உட்கார்ந்து ஒளிஞ்சிருக்கேன். அப்போ எனக்கு உரிமை இருந்தது. இப்போ இல்லை. அப்பா, அம்மா செத்ததும் நான் அனாதை ஆகிட்டேன். எனக்கு யாருமில்லை. சொல்லிவிட்டு கடைசி நெருப்பை பார்வையில் என் மீது போட்டு விட்டுப் போய் விட்டாள்.

இரண்டு மூன்று வருடங்கள் போக்குவரத்து, பேச்சு வார்த்தை எதுவுமில்லை.

கேன்சரில் என் மனைவி சாகணும். உறவு சேரணும்னு விதியின் கட்டளை. சாவிற்கு சேர்ந்தாள்.

ஒன்பதாம் நாள் உத்திரகிரியை நிகழ்வில், சொந்தக்கார பெரிசுகள் எல்லாம் கூடி துக்கம் மறைய சந்தோஷமான விஷயம் பேச வேண்டும் என்று வலியுறுத்த, என் தங்கை சந்தோஷமான விஷயமாகக் கேட்டாள், "என் பையனுக்கு என் அண்ணன் மகள் லட்சுமியைக் கேட்கிறேன்."

உறவுகள், பந்துக்கள் கூடிய அவை.

"சரின்னு சொல்லு நாராயணமூர்த்தி... சரின்னு சொல்லு நாராயணமூர்த்தி!" அடுத்தடுத்து எழுந்த கிழட்டுக் குரல்கள்.

"சரி" என்றேன்.

என் மகன் முகத்தைத் திருப்பிக் கொண்டு மறுத்தான். அப்போது அவனைச் சமாதானம் செய்வது பெரும்பாடானது.

எப்படியோ என் தங்கை மகனுக்கு, என் மகளை மணம் முடித்தாயிற்று.

- இப்போது சொத்து பிரச்னை.

**பொ**ழுது சரிந்து விட்டது. ஆறு மணி சங்கு ஊதிற்று. கூடுகளுக்குத் திரும்பிவிட்ட பட்சிகள் இறக்கைகள் படபடக்க மோதிக் கொண்டிருந்தன. உணவு கேட்கிற திரவம் குடலுக்குள் கொதித்தது. வீடு திரும்ப எழுந்தேன்.

பணியாள் பெருமாள்சாமி "அய்யா புறப்பட்டாச்சுங்களா?" என்று கேட்டபடி வந்தான்.

"புறப்பட்டாச்சு பெருமாள். ராவு முழிச்சிருந்து கரும்புக்குத் தண்ணி பாய்ச்சிடு."

"லைன் மாத்தித் தந்ததும் தண்ணி உட்டுறேன். அய்யா நாளைக்கு முக்கியமான ஜோலிங்க... போணும்."

"என்ன ஜோலி?"

என்னவோ காமெடி நடந்து விட்டதாய் பெருமான்சாமி சிரித்தான். "கோவணத் துண்டை கிழிச்சி பங்குப் போடற ஜோலி" என்றான்.

"என்ன சொல்றே?" வயிற்றுக் கடுப்பில் எரிச்சலாய் கேட்டேன்.

"நம்ம தாவை புள்ளைங்களுக்கு பிரிச்சித் தாரணுங்கய்யா."

ஏழை, பணக்காரன் யாராக இருந்தாலும் பிரிச்சித் தருகிற சடங்கு இருந்துதான் விடுகிறது.

"என்ன பிரிச்சித் தர்றே... எப்படி பிரிச்சித் தர்றே?"

"என்ன இருக்குங்க. அதான் சொல்லிட்டேனே. கோவணத் துண்டுன்னு. இருக்கிறது மூணு குழிதாவு. மூணா பங்குட்டு கல்லு நடணும்.

"ரெண்டு புள்ளைங்கதானே?"

"பொட்டைப்புள்ளை ஒன்னு இருக்கே, சந்தக்கோடியூர்ல கட்டிக் கொடுத்தது. அய்யாவுக்குத் தெரியாதா... அதுக்கும் சேத்துத்தான் மூணு பாகம்." மூக்கில் விரலை விட்டு திருகிக் கொண்டே சொன்னான்.

"பொட்டப் புள்ளைக்கு எதுக்கு பங்கு தாரணும் பெருமான்சாமி?"

"பொட்டைப் புள்ளைனாலும் நா பெத்தது தானுங்களே அய்யா. மூணுமே பையன்களா பொறந்திட்டிருந்தா மூணாத்தானே பங்கு போடணும். இல்ல, மூணுமே பொட்டையா பொறந்திருந்தாலும் மூணுக்கும்தானே தாரணும். வெறும் பொட்டையாவே பொறந்திருந்தா அதுங்களுக்கு சொத்து இல்லைன்னு கோயிலுக்கா கொடுத்துற முடியும்? நாம பெத்த புள்ளையை நாம மதிக்கலைன்னா கட்டிணுப் போனவன் மதிப்பானா அய்யா... காலமெல்லாம் குத்திக் குத்தி நோகடிக்க மாட்டானா? வயித்துல பொறந்த எல்லாத்துக்கும் உரிமை தாரணும் அய்யா. நாம செத்துட்டா பிறகு, ஆம்பிளைப் பிள்ளைங்களும், அவன்களோட பொண்டாட்டிங்களும் பொட்டப் புள்ளையைப் பார்த்துப்பாங்கன்னு என்ன நிச்சயம்? நாம உசிரு வைச்சிருக்கும் போதே ஒரு நல்லது பண்ணணும்."

பெருமான்சாமியின் வார்த்தைகள் என்னைக் குத்தின. மண்டைக்குள் என்னவோ பறந்தது. நானும் ஒரு முடிவுடன் வீடு திரும்பினேன்.

# காவ்லியின் கொட்டம்

## முடிவால் விளையும் முடிவு

**சு**தாகர் நாயக்கை நினைவிருக்கிறதா? மும்பைக் கலவரங்களின்போது, சி.எம்.மாக இவர் இருக்க, டில்லியிலிருந்து வந்த சரத்பவார் கலவரத்தை அடக்கி பெயரைத் தட்டிக் கொண்டு போக, ஹிமாசல் பிரதேசத்துக்கு கொஞ்ச காலம் கவர்னராக தூக்கி எறியப்பட்டாரே, அதே நாயக்தான்! இவர் தமது வாழ்க்கையில் புரிந்த ஒரே சாதனை, சிவசேனைக்காரரான சகன் புஜ்பாலை எப்படியோ வளைத்துப் பிடித்து, காங்கிரஸில் சேர வைத்ததுதான். இப்போது, அந்தச் சாதனையையும் தாமே முறியடிக்கப் பார்க்கிறார் – ஆம்! இவரே சிவசேனையில் சேர முடிவு செய்திருப்பதாகச் செய்திகள் வெளிவந்துள்ளன! தாக்கரே வேறு இவரைச் சந்தித்து உரையாடியது, வெறும் வாய்களுக்கு அவலாய் வாய்த்தது. ஆனால் காங்கிரஸ் வட்டாரங்கள், 'அவர் ஏதோ இயற்கை வளம் சம்பந்தமாக ஓர் அரசியல் சார்பற்ற பதவியைத்தான் ஏற்க இருக்கிறார்; கட்சி மாறப் போவதில்லை' எனக் காகமாய்க் கரைகிறார்கள். பாவம், அண்மையில் இரண்டு காங்கிரஸ் பெருந்தலைகளை சிவசேனைக்குத் தாரை வார்த்துவிட்ட கவலை அவர்களுக்கு. ஆனால் காங்கிரஸிலிருந்து இதற்கு முன்னால், சிவசேனையில் சேர்ந்த பழைய முதல்வர் போஸ்லேயும், வசந்தாவின் மனைவி ஷாலினி தாய்பாமஹும், இப்போது அட்ரசேயில்லாமல் போய் விட்டார்கள். நாயக்கின் முடிவு, இரண்டு கட்சிகளையுமே பெரிதாக பாதிக்கா விட்டாலும் அவரது அரசியல் வாழ்க்கைக்கு முடிவு கட்டிவிடும் என்றுதான் விஷயமறிந்தவர்கள் அனுதாபிக்கிறார்கள்.

## சில்லரைப் பிரச்னைகள்

**மு**ம்பையில் சிறிது காலமாகவே சில்லரைப் பஞ்சம் தலை விரித்து ஆடுகிறது. ஒன்று, இரண்டு, ஐந்து ரூபாய் நோட்டுகளெல்லாம் திடீரென்று காணாமல் போய் விட்டன. இந்தத் தட்டுப்பாட்டைத் தவிர்க்க, நூதனமான முறைகளை மும்பைக்காரர்கள் கையாண்டு வருகிறார்கள். ஒரு கடையில், நூறு ரூபாய்க்கு சில்லரை தருபவர்களுக்கு அரை லிட்டர் பால் ஃப்ரீ! 300 ரூபாய்க்கு சில்லறை கொண்டு வந்தால், ஒரு காட்பரீஸ் இனாம்! பிச்சைக்காரர்கள் தங்கள் கமிஷனை உயர்த்த, ரிசர்வ் வங்கியும் கையை விரித்துவிட்ட நிலையில், இந்தக் "கவர்ச்சித் திட்டங்களெல்லாம் நீடிக்கவில்லை! புறநகர்ப் பகுதியில் சில கடைக்காரர்கள் 'கூப்பன்' சிஸ்டத்தை அறிமுகப்படுத்தினார்கள். சாதாரண காகிதத்தில் (பஸ் டிக்கெட் பின்னால் கூட) பச்சை, சிவப்பு, வயலட் நிற இங்குகளில், 1,2,5 என்று எழுதி, கடையின் முத்திரையைக் குத்திக் கொடுத்து விடுவார்கள். ரூபாய் நோட்டுக்கு பதிலாக, இதை உபயோகப்படுத்தலாம். இதுநாள் வரை, அதே கடையில் மட்டுமே செல்லுபடியாகிக் கொண்டிருந்தன. இந்த "நோட்டுகள்", இப்போது, போர்விலி ஸாயிபாபா நகரில், இவற்றை ஏனைய கடைகளும் (ரேஷன் உட்பட) மறுக்காமல் ஏற்றுக் கொள்வதுதான் புதுமையான அதிசயம்! சவால்களைச் சமாளிக்கும் மும்பைக்காரர்களின் வழிகளே அலாதிதான்!

## கை மாறிய ஆட்சி

**பு**திய போலீஸ் கமிஷனர் செயல்படத் துவங்கி விட்டார். அருண் காவ்லியின் வலக்கரமான சாதா பாவ்லேவின் கதையை, ஒரு "என்கௌண்டரில்" முடித்து விட்டார்கள். அருண் காவ்லி அமராவதி சிறையில் அடைந்து கிடக்கையில், பாவ்லேதான் தற்போதைய தானைத் தலைவனாக இயங்கிக் கொண்டிருந்தான். இவனது மரணத்தை ஒட்டி, ஏதோ பெரிய தேசத் தலைவர் இறந்து விட்டதுபோல், இவனது வாழ்க்கை "வரலாற்றை" பயபக்தியாக வெளியிட்டிருந்தன சில தினசரிகள்.

இந்த ஒரு வருடத்திலேயே காவ்லி கூட்டத்தைச் சார்ந்த



# அடங்கி விட்டதா?

பதினைந்து நபர்கள் ஃபணாலாகிவிட, பாவ்லேவின் மரணத்துடன் காவ்லியின் கொட்டம் அநேகமாக அடங்கி விட்டதாகப் போலீஸ் வட்டாரங்கள் கருதுகின்றன. இதனால் ஏதோ அண்டர் வர்ல்டின் இயக்கமே ஸ்தம்பித்து விட்டதாக நினைத்து விட வேண்டாம்! காவ்லியின் 'ஆளுகை'க்குட்பட்டிருந்த இடங்களெல்லாம் இப்போது, தாவூத், சோட்டாராஜன் போன்றோரின் 'பரிபாலன'த்திற்கு ஆட்படும், அவ்வளவுதான்!

### "ஆ... காட்டு"

ஏற்கெனவே 'என்கௌண்டர்' மரணங்களை எதிர்த்து மனித உரிமைக் கழகம் குரல் கொடுத்துக் கொண்டிருக்கிறது; காவ்லியின் மனைவி ஆஷா வேறு, தன் கணவனை 'என்கௌண்டரில்' தீர்த்துக்கட்ட திட்டங்கள் தீட்டப்படுவதாக ஓயாமல் புலம்பிக் கொண்டிருக்கிறார். 'இந்த அழகில் ஒரு புதுக் குழப்பம்; அண்மையில் ஒரு 'என்கௌண்டரில்' கொல்லப்பட்ட "ஜாவேத் ஃபாவ்தா" அபுஸலீம் குழுவைச் சார்ந்த பயங்கரக் கொலைக் குற்றவாளி என்று போலீசார் கூற, "மாண்டது ஃபாவ்தா அல்ல, ஜாவேத் ஸ்யாமா. இவன் பாந்த்ரா ரயில் நிலையத்தில் கடலை விற்கும் சாதாரண வியாபாரி; கிரிமினல் அல்ல; கொலைக் குற்றங்கள் செய்துவிட்டு யாராவது கடலை விற்பார்களா?" என்று ஸ்யாமாவின் உறவினர்கள் வாதாடுகின்றனர். 'இந்த வேடதாரிகள் எந்த ரூபத்திலும் அவதாரமெடுப்பார்கள்; இறந்தவனின் கைரேகை சிவாஜி பார்க் போலீஸ் நிலையத்தில் 1996ல் கொலை முயற்சிக்காகக் கைது செய்யப்பட்ட ஜாவேத் ஃபாவ்தாவின் கைரேகையை ஒத்திருக்கிறது' என அடித்துப் பேசுகின்றனர் போலீசார். 'ஒரு முறை கைதானவன் தான் இவன். ஆனால் இவன் கிரிமினல் அல்ல; முக ஜாடையில் ஃபாவ்தாவை ஒத்திருப்பதுதான் இவன் செய்த குற்றம்; ஃபாவ்தாவுக்கிருக்கும் தெத்துப் பல் இவனுக்கில்லை' என சாதிக்கின்றனர் எதிராளிகள். யாரை நம்புவதோ? இனி போலீசார் சுடுவதற்கு முன், கிரிமினல்களை 'ஆ. காட்டு' என தாஜா செய்து, பின்னரே தோட்டாவை ஊட்ட வேண்டும் போலிருக்கிறது!

### வெறி பிடித்த விசிறிகள்

ஐரீஷ் பாப் பாடல் குழு 'Boy-Zone' ன் மும்பை விசிட், ஒரே அல்லோல கல்லோலமாகி விட்டது. தாஜ் ஹோட்டலின் வாயிலில் பித்தம் தலைக்கேறி நின்ற விசிறிகளின் (பெரும்பாலும் ஸ்கூல் குழந்தைகள்) நிலை பரிதாபம் + பைத்தியகாரத்தனம். இவர்களுடன் ஃபோட்டோ எடுத்துக் கொள்ள வந்த ஒரு பெண்ணால் கூட்டத்தில் புக முடியாமல் போனதற்காகக் கண்ணீர் சிந்திய அவலம்! ஓர் இளம் விசிறி, உள்ளேயிருந்த பத்திரிகையாளர்களிடம், பாப் பாடகர்கள் யாராவது ஒருவரின் தலைமுடி கிடைக்குமா எனக் கெஞ்சிய லூசுத்தனமிருக்கிறதே... கண்றாவி!

மும்பையிலிருந்து: **ஜெயஸ்ரீ ராஜ்**

# குறையொன்றுமில்லை

**ப**கவான் எங்கும் பரவியிருப்பதற்கு உதாரணமாக கிருஷ்ணாவதாரத்தைச் சொன்னேன் - வேதமும் அதையே சொல்கிறது - என்ன சொல்கிறது...?

அவன் மிருகமும் அல்ல; மனிதனும் அல்ல. நரமும் சிம்ஹமும் கலந்த அதியாச்சர்யமான ரூபம் அவன்! அவன் எங்கே இருக்கிறான்...? பர்வத குகைக்குள்ளே வாஸம் பண்ணுகிறான். தன்னுடைய வீர்யத்தினாலே எங்கும் பரவியிருக்கிறான்.

வேதாந்தத்துக்குள்ளே உறையக்கூடியவன் லக்ஷ்மி நரசிம்ஹன். பர்வதம் இருக்கிறது பாருங்கள்... அது வேதம்; பர்வத குகை இருக்கிறதே... அது வேதாந்தம்!

குகை...? மட்டபள்ளி க்ஷேத்திரத்திலே அவன் குகையினுள்ளேதானே இருக்கிறான். நான் இதைச் சொல்லும்போதே மட்டபள்ளி க்ஷேத்திரத்துக்குப் போக வேண்டும் என்று தோன்றுகிறதா இல்லையா?... எப்படியாவது போய் சேவிக்க வேண்டும் என்று ஆசை ஏற்படுகிறது.

அதனால்தான் வேதமே முதலில் 'கேட்கிற' காரியத்தை வலியுறுத்திச் சொல்கிறது. 'முதலில் அவன் மகிமையைக் கேள்' என்கிறது.

சரி. கேட்ட பிறகு என்ன பண்ண வேண்டும்...? அவனைப் பார்க்க நாமே புறப்பட்டு விடுவோம்.

இப்போது அந்த நரசிம்ஹன் இருக்கிற குகைக்குள்ளே போகிறோம்... அவன் பக்கத்திலே ராஜ்யலக்ஷ்மி தாயார் இருக்கிறாள். அங்கே குகை... அந்த குகை... போய்க் கொண்டேயிருக்கிறது. நீண்டு நீண்டு போகிறது. அது எங்கே போகிறது...?

கிருஷ்ணா நதிக்குள்ளே போகிறது குகை!

பர்வதம் உயரமாக இருக்கிறது. இந்த நதி பள்ளத்தில் இருக்கிறது. அந்த குகைக்குள்ளே நுழைந்து போனால் அது கிருஷ்ணாவின் நடுவிலே கொண்டு போய் விட்டு விடும்.

கிருஷ்ணவேணி இருக்கிறாளே.... அவள் - அந்த நதி ரூபியாய் இருக்கும்படியான அவள் - பொங்கி வந்து, அந்த குகைக்குள்ளே பிரவேசிக்கும்படியாக ஓடி வருகிறாள்.

ஓடி வந்து, இந்த எம்பெருமானை பரத்வாஜருக்குப் பிரத்யக்ஷமான இந்த லக்ஷ்மி நரசிம்ஹனை மஞ்சனம் ஆட்டுகிறாள். தானே சுயமாகத் திருமஞ்சனம் பண்ணுகிறாள்!

அப்போது, எதிரிலே நிறைய சாளக்கிராமங்கள் வைக்கப்பட்டிருக்கின்றன. உயர்ந்த தான அவன் திருவாபரணங்கள், கலசங்கள் எல்லாம் இருக்கின்றன. இந்த ஜலம் வந்து அவனுக்கு அபிஷேகம் பண்ணி விட்டுத் திரும்பிப் போகிறதே... அவற்றில் ஏதாவது ஒன்றையாவது கொண்டு போகிறதா...?

அவனுடைய அனுக்கிரஹத்தை மட்டும்தான் கொண்டு போகிறது அது!

அப்படி, விசேஷமாக, நதிகளுக்குள்ளே ஏற்றமுடையவளான, இந்த கிருஷ்ணவேணி ஓடி வந்து பிரவஹித்து அவனை நித்தியம் மஞ்சனமாட்டுகிறாள். அப்படிப்பட்ட ஏற்றமுடையவன் பரமாத்மா - அந்த குகைக்குள்ளே வாசம் பண்ணுகிறான்.

வேதாந்த குகை:

நாமாக உபநிஷத்தைப் பார்த்து அர்த்தம் தெரிந்து கொள்ள முடியாது. ஓர் ஆசார்யர்



பக்கத்திலே உட்கார்ந்து பதம் பதமாகப் பிரித்துச் சொல்ல வேண்டும். என்ன அர்த்தம் என்று விளக்க வேண்டும். அப்படிச் சொல்லக் கேட்டால்தான் புரியும்!

அப்போது, குகைக்குள்ளே இருக்கிற எம்பெருமானை நாம் உணர வேண்டுமானால், ஆசார்ய அனுக்கிரஹத்தினாலேதான் உணர முடியும். சர்வ வியாபகனானவன் குகைக்குள்ளே - மிருகமும் அல்லாத மனிதனும் அல்லாத தோற்றத்திலிருக்கிறான் என்கிறது வேதம்.

இதிலே ஒன்றை கவனிக்க வேண்டும்: பகவான் ஏன் சிம்ம முகமும் மனித உடலும் கொண்டு வந்தான்...? என்றொரு கேள்வி.

பல்லூக (கரடி) முகத்தோடு அவன் வரக் கூடாதா? புலி முகத்தோடு வரக் கூடாதா? வேறு முகத்தோடு அவன் ஏன் வரவில்லை? சிம்ஹ முகத்தோடு மட்டுமே வரக் காரணம் என்ன...?

கீதையிலே பரமாத்மா சொன்னான்:

என்னை என்னுடைய பக்தர்கள் எப்படிப் பிரார்த்திக்கிறார்களோ, அவ்வண்ணமே நான் வருவேன்.

இப்போது, நரசிம்ஹ அவதாரத்திலே பிரஹலாதன் என்ன செய்தான்...?

"எது சாது?" என்று கேட்ட ஹிரண்ய கசிபுவிடம் சொன்னான்:

"சிம்ஹம்தான் சாது என்று நினைக்கிறேன். வீட்டை விட்டுக் காட்டுக்குப் போக வேண்டும். அங்கே ஏகாந்தமாக பூஜிக்க வேண்டும். ஹரி நாம சங்கீர்த்தனம் பண்ண வேண்டும். ஹரியை பஜிக்க வேண்டும்...

"ஹரி என்றால்...?"

"ஹரியென்றால் நாராயணன் என்று அர்த்தம். ஹரி என்று சிம்ஹத்துக்குப் பெயர். அதனால் சிம்ஹத்தை உபாஸனம் செய்ய வேண்டும்" என்றது அந்தக் குழந்தை!

அதனாலேதான், குழந்தை பிரஹலாதன் சொன்னதாலேதான் பரமாத்மா சிம்ஹ முகத்தோடு வந்தான். சிம்ஹ முகம்; மனித வடிவம்.

அசுர குலத்திலே பிறந்திருந்தாலும் பிரஹலாதனிடத்திலே மனுஷ்ய பாவனை இருந்தது.

ஹிரண்ய கசிபுவினிடத்திலே மிருகத் தன்மை இருந்தது. கொடுமை மிக்கவன் அவன். அதனாலே, ஹிரண்ய கசிபுவினுடைய கொடுமையைக் காட்ட சிம்ஹ முகம். பிரஹலாதன் குணம் காட்ட மனித உடல் - இரண்டையுமே சேர்த்துக் கொண்டான்.

இப்படி - பிரஹலாதன், ஹிரண்யன் இருவரையும் உள்ளடக்கி உருவானவன்தான் குகைக்குள்ளே இருக்கிறான் என்பதால், அவனேதான் எங்கும் வியாபித்திருக்கிறான் என்றாகிறது.

சாமான்யமாக அர்த்தம் என்னவென்றால், ஒரு பர்வத குகைக்குள்ளே பரமாத்மா இருக்கிறான் என்று அர்த்தம்.

விசேஷ அர்த்தம் என்று வருகிறபோது அது வெறும் குகை அல்ல... குகை என்றால் நம்முடைய ஹ்ருதயம்தான். அந்த ஹ்ருதயம் நமக்குத் தெரிகிறதா? நம்மால் அதைப் பார்க்க முடிகிறதா...? இல்லையே! மேலெழுந்த வாரியாக உடம்பு தெரிகிறதேயொழிய ஹ்ருதயம் தெரியாது.

அதையே இந்தக் காலத்தில் சில சாதனங்களாலே பார்க்க முடிகிறது - ஹ்ருதயத்தையே பார்க்க முடிகிறது.

ஆனால், ஹ்ருதயத்துக்குள்ளே, அந்தர்யாமியான பகவான் உட்கார்ந்திருக்கிறானே, அவனை எங்கேயிருந்து பார்ப்பது?!

சஸ்திர சிகிச்சை ஏகமாக நடந்தது. Heart operation! ஹ்ருதயத்தையே எடுத்து வெளியிலே வைத்து விட்டார்! வெளியே வைத்து, அமர்க்களமாக ஆபரேஷன் நடந்தாயிற்று. மறுபடியும் அதை இருந்த இடத்திலேயே வைத்து விட்டார்! அங்கே வந்த ஒருத்தர், இந்த விஷயம் அறிந்து கேட்டார்:

"ஹ்ருதயத்துக்குள்ளே ஆயிரம் தள தாமரைப் புஷ்பம் இருக்கிறது என்று சொன்னீர்களே? அதற்குள்ளே பரமாத்மா உட்கார்ந்திருக்கிறான் என்று சொன்னீர்களே...? அதை எடுத்து இந்த டாக்டர்



## அப்பாவைக் கண்டித்த பகத்சிங்!

பகத் சிங்கிற்குச் சிலை செய்து, அது திறவப்படாமல் முப்பது வருடங்களாகக் கிடங்கில் முடங்கிக்கிடப்பதாக அண்மையில் ஒரு செய்தி படித்தபோது வருத்தமாக இருந்தது. அத்துடன் ஒரு சம்பவமும் நினைவு வந்தது. மானமும் ரோஷமும் உள்ள பகத்சிங் தூக்கிலிடப்பட இருந்தபோது, அவர் தந்தை புத்திர பாசத்தால் நீதிபதியிடம் கருணை மனு போட்டாராம். அவரைக் கண்டித்து பகத்சிங் எழுதிய கடிதம் இதோ:

அப்பா, நீங்கள் என்னைக் கலந்து பேசாமலும் எனக்கு அறிவிக்காமலும் என் முதுகில் குத்துவதைப் போலக் கருணை மனு போட்டதாகக் கேள்விப்பட்டு அதிர்ச்சியுற்றேன். என் உயிரை நீங்கள் மதிக்கிற அளவு நான் மதிக்கவில்லை. கொள்கையை விற்று விட்டு உயிரை மீட்டுக் கொள்ள நான் விரும்பவில்லை.

இப்படிக்கு,
பகத்சிங்

தகவல்:
வியாசர்பாடி சித்தாரவி

எங்கேயும் வைக்கக் காணோமே?...."

– இப்படிக் கேட்பவர்களுக்கு பதில் இது தான்: – இவ்வளவு பெரிய சிகிச்சை செய்யும் டாக்டர் அதிலே எவ்வளவு படித்திருக்க வேண்டும்! அதிலே எவ்வளவு உயர்ந்த ரீதியிலே தேர்ச்சி பெற்றிருக்க வேண்டும். சாமான்யமான ஒருவர் போய் அந்த ஆபரேஷனைப் பண்ண முடியுமா?

அது போன்றுதான், யமன, யம, ப்ராணாயாம, ப்ரத்யாஹார, தாரண, ஆஸன, சமாதி என்பதிலே நாமும் தேர்ச்சி பெற்றிருந்தால், ஹ்ருதயத்துக்குள்ளே அந்த சிஹஸ்ரதள புண்டரீகத்திலே எம்பெருமான் எழுந்தருளியிருப்பதை நாமும் பார்க்க முடியும்.

சாமான்யர்களாயிருக்கிற நமக்கு, எப்படி சஸ்திர சிகிச்சை பண்ணத் தெரியாதோ, அதே போல்தான் சாமான்யர்களாயிருக்கிற அடியார்களாலே ஹ்ருதயத்துக்குள்ளே இருக்கிற எம் பெருமானைப் பார்க்க முடியாது.

அவன் சத்யமாக இந்த ஹ்ருதயத்துக்குள்ளே இருக்கிறான் என்பதை உபநிஷத் நமக்கு எடுத்துச் சொல்கிறது. நமது ஹ்ருதய குகைக்குள்ளே இருப்பவன்தான் எங்கும் பரவியிருக்கிறான்.

இதிலிருந்து என்ன தெரிகிறது...? விச்வத்தையே, விஷ்ணுவையே நமக்குள்ளே தியானம் பண்ணிக் கொள்ளலாம் என்று தெரிகிறது.

இந்த சரீரத்திலேயே, நமக்குள்ளேயே சமஸ்தமும் அடங்கியிருக்கிறது. அதனால்தான், பகவான் இருக்கிற இடம் என்பதால்தான், இது க்ஷேத்திரமாகிறது.

இதிலே நல்லதும் விளையும்; தீயதும் விளையும். பாவத்தையும் சாகுபடி பண்ணலாம், புண்ணியத்தையும் சாகுபடி பண்ணலாம்.

க்ஷேத்ரம் என்றால் பூமி; க்ஷேத்ரம் என்றால் திவ்ய தேசம்.

பகவான் எங்கெங்கு இருக்கிறான் என்று வேதம் சொல்கிறது:

சூர்ய மண்டலத்தில் இருக்கிறான்; அக்னி மண்டலத்தில் இருக்கிறான்; நட்சத்திர மண்டலத்தில், சந்திரனில் அவன் இருக்கிறான். சம்வஸ்த், தேவதையிடத்திலே இருக்கிறான் என்று வரிசையாகச் சொல்லிக் கொண்டே வருகிறது. நம்முடைய ஹ்ருதயத்திலேயும் அவன் வாஸம் பண்ணுகிறான் என்கிறது வேதம். இந்த ஹ்ருதய குகையிலே அவன் எப்படியிருக்கிறான் என்றால், நரசிம்ஹனாக இருக்கிறான். அந்த குகைக்குள்ளே இருக்கிற நரசிம்ஹன்தான் உலகம் எல்லாவற்றையும் அளந்த திரிவிக்கிரமனாகவும் இருப்பவன். அதைப் பார்த்துத் தெரிந்து கொள்ளுங்கள், அவன்தான் விஷ்ணு என்பதை.... இப்படிச் சொல்கிறது வேதம்.

சஹஸ்ர ஷீரிஷா புருஷ: என்று ஆரம்பிக்கும் புருஷ சூக்தம் அவன் ஆயிரம் தலைகள் படைத்தவன் என்று சொல்கிறது. அதன் ஆரம்ப வாக்கியமே அதுதான்! ஆயிரம் கண்கள் உடையவன் அவன்.

உடனே நமக்குச் சந்தேகம் வரும். அவனுக்கு ஆயிரம் தலைகள்தானா? ஆயிரம் கண்கள் தானா...? என்று யோசனை வரும்.

"இந்த மாபெரும் பொதுக் கூட்டத்திற்கு வருகை தர நினைத்து, ஆனால் கடைசி நேரத்தில் வரமுடியாமல் போன ஆயிரக்கணக்கான தொண்டர்களுக்கு முதலில் என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்!"

– க. சரவணகுமார்

ரிக் வேதத்திலும், ஸாம வேதத்திலும் யஜுர் வேதத்திலும் அப்படித்தான் குறிப்பிடப் பட்டிருக்கிறது. ஆயிரம் தலையுடையவன் என்றுதான் வருகிறது. ஆனால் அதர்வண வேதத்திலே மட்டும் பார்த்தோமானால்,

அனேக சிரிஷா புருஷ: என்று வருகிறது. சஹஸ்ர (ஆயிரம்) என்ற வார்த்தை வரவில்லை. இங்கே இந்த அதர்வண வேதத்தையும் மற்ற வேதங்களையும் ஒப்பிட்டுப் பார்க்கும்போது என்ன தெரிகிறது?

சஹஸ்ரம் என்கிற எண்ணிக்கைக்கும் அனேகம் என்றுதான் அர்த்தம். ஒரு வரையறுக்கப்பட்ட எண்ணிக்கையை சஹஸ்ரம் என்று சொல்ல வரவில்லை. எல்லாமே அவன் தலைகள்தான். எல்லாமே அவன் கண்கள் தான்!

(தொடரும்)

# அது ஒரு கனாக்காலம்

ஜி.ஆர். சுரேந்தர்நாத்

தனது மகன் ஆதித்யாவை அழைத்துக் கொண்டு மூர்த்தி வராந்தாவில் நடந்து கொண்டிருந்தான். அந்த மலைப் பிரசதேசத்தில் எப்பொழுதும் பெய்யும் மழை இப்பொழுதும் பெய்து கொண்டிருந்தது.

வராந்தாவின் திருப்பத்தில் திடீரென்று தீபாவை பார்த்தவுடன் மனதிற்குள் மெல்லியதாக ஓர் இடறல். தினந்தோறும் அவளைப் பார்த்துக் கொண்டிருந்தாலும், தனது மகனோடு பார்ப்பது இதுதான் முதல் முறை. தீபாவும் அருகில் ஒரு பெண்ணுடன் வந்து கொண்டிருந்தாள். இவனைக் கண்டவுடன் லேசாகச் சிரித்தாள். இவன் அருகில் வந்தவுடன் நின்றாள்.

மூர்த்தி சமாளித்துக் கொண்டு, "இது என்னோட சன் ஆதித்யா. இன்னக்கி பி.எஸ்ஸி ஜாயின் பண்றான்" என்றான். சட்டென்று தீபாவின் கண்கள் கலங்குவதை மூர்த்தியால் உணர முடிந்தது. மூர்த்தியும், தீபாவும் சேர்ந்து தங்கள் பையனுக்கு வைக்க உத்தேசித்திருந்த பெயரை மூர்த்தி தன் பையனுக்கு வைத்திருந்தான்.

சில விநாடிகள் அமைதிக்குப் பிறகு தீபா ஆதித்யாவை நோக்கி, "ஹலோ வெல்கம்" என்று கூறிவிட்டு, "அப்புறம் மூர்த்தி, இது என்னோட டாட்டர் கௌதமி. அவளும் இன்னக்கி ஜாயின் பண்றா" என்று கூறியவுடன் மூர்த்தி அதிர்ந்துதான் போனான்.

அப்பொழுதுதான் அருகிலிருந்த பெண்ணின் முகத்தை கவனித்தான். தீபாவின் சாயல் அப்பட்டமாக அவள் முகத்தில் தெரிந்தது. மூர்த்தி ஒன்றும் பேசத் தோன்றாமல் மெலிதாகச் சிரித்தான்.

வராந்தாவுக்கு வெளியே அவசரமாகப் பெய்து கொண்டிருந்த மழை; மழைக்கு ஒதுங்கிய ஆடுகளின் கனைப்புச் சத்தம்; வராந்தாவில் இனம் புரியாத அமைதியுடன் மூர்த்தி, தீபா, ஆதித்யா, கௌதமி. ஏதோ தமிழ் சினிமாவின் ஒரு திட்டமிட்ட காட்சி போல் தெரிந்தது. பல சமயங்களில் வாழ்க்கை சினிமாவை விட திருப்பங்களும், அபத்தங்களும் நிறைந்தது.

மூர்த்தியின் மனைவியும், மகனும் ஹாலில் டி.வி. பார்த்துக் கொண்டிருந்தனர். அறையில், மூர்த்தி வாயில் சிகரெட்டுடன் ஜன்னலுக்கு வெளியே பெய்யும் மழையைப் பார்த்துக் கொண்டிருந்தான். மழை, மல்லிகைப் பூ, சப்போட்டாப் பழங்கள் என்று பல விஷயங்கள் தீபாவை நினைவுபடுத்துவதாகவே இருக்கும்.

அப்பொழுதெல்லாம் தீபா அடிக்கடி கேட்பாள். "நீ இல்லன்னா நான் செத்துப் போயிடுவேன்; நான் இல்லன்னா நீ செத்துப் போயிடுவியா?"

"சீ... பைத்தியம். எதுக்கு சாவப் பத்தி நினைக்கணும்? நாம எப்படியெல்லாம் வாழணும்னு நான் எவ்ளோ கனவு வச்சுருக்கேன். நீ எதுக்கு தீப்பு சாவப் பத்தி பேசற?"

"அடேங்கப்பா... நானும் அப்படித்தான். நெறய நினைச்சுருக்கேன். ஒனக்கு என்ன கனவு? சொல்லு."

"சொன்னா பின்னாடி த்ரில்லிங் போயிடுண்டி."

"பரவால்ல. சொல்லுப்பா. ப்ளீஸ்" என்றாள் தீபா கண்களைச் சுருக்கிக் கொண்டு, கெஞ்சலாக.

"ம்... ஒன் பிறந்த நாளன்னிக்கு காலைல ஒனக்கு முன்னாடியே எழுந்திரிச்சுருவேன். ஒரு டப்பா நெறய வண்ணத்துப் பூச்சிங்களைப் பிடிச்சு ஏற்கெனவே வச்சிருப்பேன். ஒன்ன எழுப்பிவிட்டு, ஒன் கண்ணு முன்னாடி டப்பாவ தெறந்து விடுவேன். கலர் கலரா வண்ணத்துப் பூச்சி பறந்து போறதப் பாத்து நீ பூரிச்சு போய் நிக்கறப்ப, "ஹேப்பி பர்த்டே" சொல்வேன்."

"அடேங்கப்பா..." என்று தீபா சிறு பிள்ளையாக ரோட்டில் கைத்தட்டிக் குதித்தாள்.

திடீரென்று மழை பெய்ய, அந்த சர்ச்சிற்கு அருகிலிருந்த மரத்தடியில் ஒதுங்கினர். ஃபாதரின் பிரசங்கம் மெலிதாகக் காற்றில் ஒலித்துக் கொண்டிருந்தது. லேசாக நனைந்து விட்டிருந்தார்கள். சில்லென்று வீசிய காற்றில் தீபா பற்கள் வெடவெடக்க, "ம்... அப்புறம் சொல்லு" என்று கூறிய அழகிற்கு ஆயிரம் கவிதைகள் எழுதலாம்.

"ம்... அப்புறம் இந்த மாதிரி மழை பெய்யறப்ப, ஜன்னலுக்கு வெளிய ரெண்டு பேரும்



## "மென்காற்றில் மெழுகுவர்த்தி!"

**பிரிட்டிஷ் இளவரசி டயானாவின் இறுதி ஊர்வலத்தில் பாப் பாடகர் "எல்டன் ஜான்" பாடிய "மென்காற்றில் மெழுகுவர்த்தி" (candle in the wind) என்ற பாடல், அமெரிக்காவில் எட்டு மில்லியன் இசைத்தட்டுகள் விற்றுத் தீர்ந்து விட்டன.**

**இரண்டு மில்லியனுக்கும் அதிகமாகத் தயாரித்து, விற்பனையாகும் இசைத் தட்டு களுக்கு பிளாட்டினம் விருது அளித்து கௌர விக்கும் அமெரிக்காவின் இசைத்தட்டு நிறு வனம் இந்தப் பாடலுக்கு Multi platinum status அளித்துள்ளது!**

**– திருநீலக்குடி மா. உலகநாதன்**

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

கையக்கோத்து மழைத்தண்ணில நனைஞ்சுக் கிட்டே ஜேசுதாஸ் பாட்டு கேக்கணும். ம்... அப் புறம்.. போடி.. அது இருக்கு வண்டி வண்டியா."

"அடேங்கப்பா... வண்டி வண்டியா இருக்கா?"

"ச்... கருமம். மொதல்ல இந்த மாதிரி எதுக் கெடுத்தாலும் அடேங்கப்பான்னு சொல்றத நிறுத்தித் தொலை. அசிங்கமா இருக்கு. விட்டா இன்னக்கி சனிக்கிழமைன்னு சொன்னா, அடேங்கப்பா இன்னக்கி சனிக்கிழமையான்னு கேப்ப போலிருக்கு. மொதல்ல அத நிறுத்து."

"அடேங்கப்பா... அது எப்படி சொல்லாம..." என்ற தீபா அவன் முறைப்பைக் கவனித்து நாக் கைக் கடித்தாள். பரிதாபமாக விழித்தாள். மழை நீரில் கலைந்து போயிருந்த கண்மையுடன், அவள் விழிப்பதைப் பார்த்து அவனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. மெதுவாக சிரிக்க ஆரம் பித்து, பிறகு அவன் சத்தமாகச் சிரிக்க, தீபாவும் உடன் சேர்ந்து சிரித்தாள்.

சிரிப்பு. சதா சர்வகாலமும் பேச்சு. சிரிப்பு. பின்னாளில் அழுவதற்காகவோ என்னவோ நிறைய சிரித்தாகி விட்டது.

இரண்டு வருடங்களில் இந்த மலைப் பிரதே சத்தில் அவர்கள் கால்கள் படாத இடமே இல்லை. மழையுடனோ, மழையில்லாமலோ, குடையுடனோ, குடையில்லாமலோ, பேச் சுடனோ, பேச்சில்லாமலோ திரிந்த நாட்கள் அவை.

அதுவும் ஒரு மழை நாள்தான். மழையில், ஒரே குடைக்குள் இருவரும் மூச்சு வாங்க, தார் ரோட்டு மேட்டில் ஏறிக் கொண்டிருந்தனர்.

"ஏன் மூர்த்தி? ஒங்க அம்மா ஒன்ன நடந்துக் கிட்டே பெத்தாங்களா? ஒரு ஓரமா ஒக்காந்து லவ் பண்ணப் பிடிக்காதா? இப்படித்தான் மேட்டுல இழுத்துக்கிட்டுப் போகணுமா? அடேங்கப்பா... எப்படி மூச்சு வாங்குது?"

"இல்லடி... மழையில மனசுக்குப் புடிச்சவ ளோட நடந்து போறது தனி சொகம் தெரி யுமா?"

"நல்ல சொகம்தான் போ. சரி. ஒன்கிட்ட அடிக்கடி கேக்கணும்னு நெனைப்பேன். நம்ப காதல் தோத்துட்டா என்ன பண்ணுவ?"

"ம்... ஜெயிச்சா ஒன்னக் கல்யாணம் பண்ணிப்பேன். தோத்தா கவிதை எழுதுவேன்."

"அய்யோ... சீரியசா சொல்லு."

"என்ன பண்ணலாம்? ம்... அதான் லொகே ஷன்லாம் அருமையா இருக்கே. இதே மாதிரி மழைல தாடியோட சால்வையப் போத்திக் கிட்டு, வானத்த வெறிச்சுப் பாத்துக்கிட்டு தனியா நடந்து போவேன். லாங் ஷாட்ல பாக்க அற்புதமா இருக்கும்."

"அய்யோ" என்று கையிலிருந்த பேக்கால் முதுகில் அடித்தாள். "இதுக்கு மேல நம்மால நடக்க முடியாதுப்பா" என்று மூச்சு வாங்கக் கூறிவிட்டு, ஓடிப் போய் ஒரு மரத்தடியில் நின்று கொண்டாள். அருகில் போய் நின்று கொண்டு, ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தான் அவன்.

தீபா மூச்சு வாங்க, "லவ் பண்ணலாம்னு வந்தா நீ ராமர், சீதாவ அழைச்சுக்கிட்டு வன வாசம் போறமாதிரி காடு, மேடுன்னு சுத்தற" என்றாள்.

அவன் சிரித்துக் கொண்டே அவள் முகத் தில் புகையை ஊதினான்.

"நான் எவ்வளோ சொன்னாலும் இந்த சிகரெட் பிடிக்கற பழக்கத்த விடமாட்டேல்ல?"

"என்ன பண்றது? விட முடியலியே..."

"ஒன் நன்மைக்குச் சொன்னா, கேக்க மாட்டேல்ல? போ" என்று கூறிக் கொண்டே, அருகிலிருந்த சிமெண்ட் கட்டையில் அமர்ந்து, மடியில் முகத்தை புதைத்துக் கொண்டாள். அழும் சத்தம் கேட்டது.

"ஏய்... தீப்பு என்ன இது? இதுக்குப் போய் அழுதுக்கிட்டு, எழுந்திரு" என்று அவள் முகத்தை நிமிர்த்தினான். அவள் கண்கள் கலங்கியிருந்தன. அவன் பதறிப் போய் விட்டான்.

"நீதான் சிகரெட் நிறுத்த மாட்டேங்கறியே?"



"சே, வர வர எதைத்தான் அண்டை மாநிலங்களோட ஒப்பிடறதுன்னு விவஸ்தையில்லாம போச்சு!"

"ஏன், என்னாச்சு?"

"அந்த ஆபீசர் கையெழுத்துப் போட என்கிட்டே ஆயிரம் ரூபாய் கேட்டாரு! 'ஆயிரம் அதிகம். கொஞ்சம் குறைச்சுக்கக் கூடாதா'ன்னு கேட்டால், 'ஆந்திரா, கர்நாடக மாநிலங்களோட ஒப்பிட்டா நான் கேக்கறது குறைச்சல். அங்கேயெல்லாம் இரண்டாயிரம், மூவாயிரம் கேப்பாங்கங்கறாரு!"

— டி. என். பாலகிருஷ்ணன்

---

"அதுக்குன்னு அழணுமா? அப்படி ஒண்ணும் எனக்கு சிகரெட் தேவையில்லே!" என்று கூறி சிகரெட்டை மழை நீரில் விட்டெறிந்தான்.

"குட் பாய்." என்று தீபா சிரித்தாள்.

திடீரென்று விக்ஸ் வாசனையை உணர்ந்த அவன், "என்ன திடீர்னு விக்ஸ் வாசனை வருது?" என்றான்.

"இங்கதான் நெறயா யூகலிப்டஸ் மரம் இருக்கே. அதான்."

"இல்ல. ஒன்கிட்டயிருந்து" என்று கூறிய அவன், அவள் முகத்துக்கருகில் மூக்கைக் கொண்டு சென்றான். தீபாவின் வலது கண்ணுக்கருகில் வந்தவுடன், விக்ஸ் வாசனை மூக்கைத் துளைத்தது.

"நாயே... உண்மையச் சொல்லு."

தீபா அசடு வழிய சிரித்துக் கொண்டே, கையிலிருந்த விக்ஸ் டப்பாவைக் காட்டினாள்.

"ஒன்ன.." என்று அவளை அடிக்க கையை ஓங்க, அவள் விலகி ரோட்டில் ஓடினாள். அவனும் குடையை விட்டுவிட்டு பின்னால் துரத்தினான்.

சில விநாடிகளுக்கு மேல் அவளால் ரோட்டில் ஓட முடியவில்லை. நின்று மூச்சு வாங்கினாள். மூர்த்தியும் அருகில் நின்று, புஸ் புஸ்ஸென்று காற்றை வெளியே விட்டான். இருவரும் மழையில் நனைந்து கொண்டு நடு ரோட்டில் நின்று கொண்டிருந்தனர்.

தீபா மூச்சு வாங்க, "நான்... ஹ... சும்மா விக்ஸ் போடலாம்னு... ஹ.. பேக்லயிருந்து எடுத்தேன். சரி. நான் அழுதா, நீயும் அழறியான்னு டெஸ்ட் பண்ணலாம்னு கண்ல போட்டேன். நீ சரியான கல்லுளி மங்கன். கண்ணுல ஒரு சொட்டுத் தண்ணி வரல" என்றாள்.

அவன் அடக்க முடியாமல் சத்தம் போட்டு சிரித்தான். கூடவே தீபாவும் சிரித்தாள்.

தூரத்தில் பஸ் வருவதைக் கவனித்து மீண்டும் பழைய இடத்திற்கு வந்து சிமெண்ட் கட்டையில் அமர்ந்தனர்.

தீபா அவன் கழுத்தைக் கைகளால் கட்டிக் கொண்டு, தனது தலையைத் தோளில் சாய்த்துக் கொண்டாள்.

"சரி... நான் கேட்ட கேள்விக்கு பதிலே சொல்லலியே. நம்ம காதல் தோத்துப் போயிருச்சுன்னா என்ன பண்ணுவ?"

"நான் என்ன பண்றங்கறது இருக்கட்டும் நீ என்ன பண்ணுவ? சொல்லு?"

"அடேங்கப்பா... நீ இல்லன்னா நான் அவ்வளவுதான். அப்படி ஒரு லைஃபை என்னால இமாஜின் பண்ணிக்கூட பாக்கமுடியல" என்றாள் தீபா.

கடைசியில், "அடேங்கப்பா. இவ்வளவு தீவிரமா எங்க அப்பா எதிர்ப்பாருன்னு நான் எதிர்பார்க்கவேயில்லை. சாரி" என்று ஒரு மழைநாள் மாலையில் சொல்லிவிட்டு சட்டென்று அவன் வாழ்க்கையிலிருந்து காணாமல் போய்விட்டாள்.

சிகரெட் கையைச் சுட, மூர்த்தி மீண்டும் நிகழ்காலத்திற்கு வந்தான்.

முன்னாள் காதலனைப் பார்க்கும் பொழுது தீபாவிற்கு தமிழ் நாவல் கதாநாயகிகள் போல தூக்கி வாரிப் போடுவதில்லை. அவன்தான் தினந்தோறும் பார்த்துக் கொண்டிருக்கிறானே!

இருப்பினும் மூர்த்தி தனது மகனின் பெயரைச் சொல்லிய பொழுது மிகவும் வேதனையாகத்தான் போய்விட்டது. அந்த வேதனையில் தீபாவிற்கு இரண்டு மணி நேரமாகப் புரண்டு புரண்டு படுத்தும், தூக்கம் வரவில்லை. தங்கள் பிள்ளைகளுக்குப் பெயர் வைத்த சம்பவம் நினைவிற்கு வந்தது.

"எத்தன புள்ள பெத்துக்கலாம் மூர்த்தி?"

"நெறயா. எக்கச்சக்கமா. நாம முன்னாடி நடந்து போறப்ப பின்னாடி கௌரவர் மாதிரி நம்ப புள்ளங்க வரணும்."

"நூறா? அடேங்கப்பா. நான் செத்தேன். என்று பொய்யாக கண்மூடி மயங்கினாள் தீபா. "ஒரு புள்ளக்கி பத்து மாசம்னா நூறு புள்ளக்கி ஆயிரம் மாசம். கிட்டத்தட்ட எம்பத்து மூணு வருஷம் புள்ளயா பெத்துக்கிட்டிருக்கணும் நான்."

# இனிமே இது தான் போட்டி

# மிக மிக மிக சுலபம்!

கவையான, புதிய ஏவிடி அஸ்ஸாம் டீ 250 கிராம் பாக்கெட் ஒன்றை வாங்குங்கள். அத்துடன் ஒரு நுழைவுத் தாள்.

சன் டி.வி, சென்னை தொலைக் காட்சி மற்றும் விஜய் டி.வி. ஆகியவற்றில் ஏவிடி அஸ்ஸாம் டீ விளம்பரத்தைப் பார்த்த பிறகு, நுழைவுத் தாளைப் பூர்த்தி செய்யுங்கள்.

ஏவிடி அஸ்ஸாம் டீ பாக்கெட்டின் கீழ் பகுதியின் சான்றை இணைத்து, பூர்த்தி செய்த நுழைவுத் தாளை எங்களுக்கு அனுப்புங்கள்.

அதன் பிறகு, நல்ல மணம் வீசும் ஸ்ட்ராங்கான ஏவிடி அஸ்ஸாம் டீ பருகுங்கள் - பலன் கிடைக்கும், காத்திருங்கள்!

நீங்கள் வெற்றி பெறக் கூடியவை:

விரைந்து செயல்படுவோர்க்கான பரிசு : 500 ஏவிடி அஸ்ஸாம் ஏர்-பேக் (தினமும் பத்து)

ஆறுதல் பரிசு : 250 ஏவிடி அஸ்ஸாம் குடைகள்

4-வது பரிசு : 100 ஏவிடி அஸ்ஸாம் சுவர்க் கடிகாரங்கள்

3-வது பரிசு : மூன்று ரெப்ரிஜிரேட்டர்கள்

2-வது பரிசு : இரண்டு கலர் டி.வி.

முதல் பரிசு : 10 சவரன் தங்கம்

வெற்றி பெறுவதற்கு 856 பரிசுகள் - இழப்பதற்கு ஒன்றும் இல்லை...

ஏவிடி அஸ்ஸாம் டீ 250 கிராம் பாக்கெட் ஒன்றை வாங்குங்கள். அது உங்களுடைய அதிர்ஷ்ட நாளாக இருக்கும்!

நுழைவுத் தாள்கள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 15 நவம்பர், 1997.

நுழைவுத்தாள்களை அனுப்ப வேண்டிய முகவரி : தபால் பெட்டி எண். 4550 சென்னை - 600 006



"அய்யா... ஜாலி."

"ஜாலி. மொகரக்கட்டைல இடிப்பேன். சொல்லு எத்தன புள்ளங்க?"

"ம்... ரெண்டு. ஒரு பையன். ஒரு பொண்ணு."

"கரெக்ட்.. நானும் அதேதான் நினைச்சுருக்கேன். பேருல்லாம் முடிவு பண்ணிட்டேன். பொண்ணு பேரு கௌதமி. புத்தரோட சித்தி பேரு."

"என்னது? புத்தரோட சித்தி பேரா? பைய னுக்கு என்ன? புத்தரோட தாத்தா பேரா?"

"சே... சே... செலுகஸ் நிகேடார்."

"என்னது?"

"செலுகஸ் நிகேடார். அலெக்சாண்டருக்கு பெறகு க்ரீக்ல ஆட்சிக்கு வந்தார்."

"கஷ்டண்டா சாமி. இதுக்குத்தான் எம்.ஏ. ஹிஸ்டரி படிச்ச பொண்ணெல்லாம் லவ் பண்ணக்கூடாது."

"இல்லன்னா... மெகஸ்தனிஸ்."

"அறைஞ்சேன்னா பல்லெல்லாம் பேந்துடும். பேரப் பாரு."

"டிஃபரண்டா இருக்கும்ல்ல."

"அதெல்லாம் ஒண்ணும் வேணாம். அந்த கௌதமிங்கிற பேரு நல்லா இருக்கு. அந்த மாதிரி சொல்லு."

"ம்... ஆதித்யா. நல்லாருக்கா?"

"இது நல்லாருக்கு. பரவாயில்லையே. நான் - ஹிஸ்டாரிக்கல் பேரு கூட தெரிஞ்சு வச்சிருக்கியே?"

"இல்லல்ல. இவரு சோழ ராஜா. இவருதான் பல்லவ மன்னன் அபராஜிதவர்மன தோக்கடிச்சார்."



**"என்னய்யா இது? மீட்டிங் நடத்த சுண்டல் செலவு ஆயிரம்னு எழுதியிருக்கே?"**

**"கூலிக்கு ஆட்களைக் கூட்டியிருந்தாலும், முழுசா மீட்டிங் பாக்கணும்னா எதையாவது கொறிச்சுக்கிட்டே இருக்கணும்னு கேட்கறாங்க தலைவரே!"**

**— அம்பை தேவா**

"அய்யோ சாமி. ஆள விடும்மா. தெரியாம லவ் பண்ணிட்டேன்" என்று மூர்த்தி பெரிய கும்பிடாக போட்டுவிட்டு, புல்வெளி மேட்டில் ஓடினான்.

தீபா அடக்க முடியாமல் சிரித்தாள். சிரிப்பு. சிரிப்பு. மூர்த்தியுடன் பழகிய காலகட்டத்தில் எப்பொழுதும் சிரிப்புதான். எப்போதும் எதாவது லூட்டியாகப் பேசிக் கொண்டேயிருப்பான்.

"மூர்த்தி... நமக்குக் கல்யாணம் ஆன பெறகு டெய்லி காலைல எழுந்திரிச்சு என்ன பண்ணுவ?"

"சீ... இது என்னடி அசிங்கமா ஒரு கேள்வி. வழக்கம் போல பாத்ரூமுக்குத்தான் போவேன்."

"சீ... கருமம். அப்புறம் என்ன பண்ணுவ?"

"அப்புறம் என்ன... வாசல்ல ஒக்காந்துக்கிட்டு பேப்பர் படிச்சுக்கிட்டே எதிர் வீட்டுக்காரன் பொண்டாட்டிய சைட் அடிப்பேன்."

"செருப்பு பிஞ்சிடும். நான் என்ன நினைச்சுருக்கேன் தெரியுமா? நீ ரூம்ல ஒக்காந்து பேப்பர் படிச்சிக்கிட்டிருப்பியாம். நான் ஒன் முதுகுல வந்து குப்புற படுத்துக்கிட்டு காதக் கடிப்பேன்."

"குப்புறக்கயா... அய்... ஜாலி!"

"ஆனா நீ கண்டுக்காம பேப்பர் படிச்சுக்கிட்டிருப்பியாம். எனக்குக் கடுப்பாயிடும்."

"என்ன தீப்பு? என்னப் பத்தி இவ்வளவு கேவலமா நெனச்சுக்கிட்டிருக்க. ஒரு பொண்ணு என் முதுகுல குப்புற படுத்த பெறகும் பேப்பர் படிக்க நான் என்ன பைத்தியக்காரனா?"

ஒரு நிமிடம் அவன் சொல்வது புரியாமல் விழித்த தீபா, பிறகு அர்த்தம் புரிந்து கொண்டு, "சீ... நாயே... எப்பப் பாத்தாலும் அதே நெனப்புத்தானா?" என்றாள் வெட்கத்துடன்.

"என்ன பண்றது? வயசு அப்படி. எல்லாம் கல்யாணமாகி கொஞ்ச நாளைக்குத்தான். அப்புறம், ஏண்டி இப்படி ஒட்டிக்கிட்டு படுத்துருக்க. கசகசங்குது. தள்ளிப்படு சனியனேம்பேன்."

தீபா, வயிற்றைப் பிடித்துக் கொண்டு சத்தம் போட்டுச் சிரித்தாள். முழு வாழ்க்கைக்கும் சேர்ந்தாற்போல அந்த இரண்டு வருடங்களில் சிரித்து விட்டாள். அதற்குப் பிறகு சத்தமான அந்த சிரிப்பு அவளிடமிருந்து பிறக்கவே யில்லை.

கடிகார சத்தத்தில் தீபா மீண்டும் நனவுலகிற்கு வந்தாள். பழைய நினைவுகள் அவளுக்கு ஒருசேர சிரிப்பையும், வேதனையையும் வரவழைத்தன. செத்துப் போன பணக்கார அப்பாவின் மேல் தீபாவிற்கு கோபமாக வந்தது. "இப்படி சீரழிச்சுட்டீங்களேப்பா... ஒங்க வறட்

டுத்தனமான கௌரவத்திற்கும், போலித்தனமான அந்தஸ்திற்கும் பலியாடா என்னோட கனவுகளை வெட்டிப் புதைச்சிட்டீங்களே? என்னப்பா சாதிச்சீங்க? போறப்ப ஒங்க காரும், பங்களாவும் கூடவா வந்துச்சு? நீங்க செத்துப் போன பிறகும், நீங்க எங்கள அநியாயமா பிரிச்சதுதானே நெனைவுல வருது. பணக்காரனோட நான் வாழ்ந்தா சந்தோஷமா இருப்பேன்னு நெனச்சுக்கிட்டு, சாவற வரைக்கும் தீராத வேதனையத்தான தந்தீங்க. ஒங்க பாசத்த மீறமுடியாம மூர்த்திய கல்யாணம் பண்ணிக்கலையே தவிர இன்னும் அந்தக் காதலும், பிரிவோட வேதனையும் அப்படியே இருக்கேப்பா" என்று நினைத்த தீபாவிற்கு அடக்க முடியாமல் அழுகை வந்தது. அருகில் படுத்திருந்த தனது மகள் கௌதமி அசைவதைக் கண்டு வாயைப் பொத்தி அழுகையை அடக்கினாள்.

**ம**ழை, மழைக்காக மரத்தடியில் ஒதுங்கியிருக்கும் ஆதித்யா, கௌதமி. ஆதித்யா சிகரெட்டைப் புகைத்துக்கொண்டே, கௌதமியை நோக்கி, "இங்க பாரு. இப்ப என் கண்ணுல புகை வரும் பாரு!" என்றான்.

கௌதமி உற்றுப் பார்த்து, "எங்கடா? வரவே இல்ல" என்றாள்.

"நல்லாப் பாரு வரும்" என்றான் வாயில் புகையை விட்டுக் கொண்டே.

"ஆமாண்டா. எப்படிரா இது?" என்று கௌதமி அப்பாவியாகக் கூவினாள்.

ஆதித்யா அடக்க முடியாமல் சிரித்தான். "அய்யோ மக்கு. ஒன்னக் கல்யாணம் பண்ணிக்கிட்டு எப்படி குடும்பம் நடத்தப் போறனோ?" என்றான்.

"நாயே... கதையா விட்ட" என்று கூறிக் கொண்டு, கௌதமி அவன் நெஞ்சில் இரண்டு கைகளாலும் மாறி மாறி குத்தினாள். அப்படியே அவன் தோளில் சாய்ந்து கொண்டு, "ஆதி, நம்ப பிள்ளைங்களுக்கு என்ன பேரு வைக்கலாம்?" என்றாள்.

அதே நேரத்தில், கௌதமியின் பணக்கார அப்பா, பம்பாயிலிருந்து சென்னை வரும் ப்ளேனில், பம்பாயில் தன் பெண்ணுக்காக பார்த்து வைத்திருக்கும் பணக்கார வீட்டுப் பையனின் ஃபோட்டோவை பார்த்துக் கொண்டிருந்தார்.

**பின் குறிப்பு:** சரியாப் போச்சு. கதை அவ்வளவுதான். அய்யய்யோ... அப்புறம் கௌதமி இப்பொழுது ஆதித்யாவிடம் பேசிக் கொண்டிருப்பதெல்லாம்... அட போங்கப்பா (ம்மா). கோபித்துக் கொள்ளாமல் பக்கங்களை முன்னோக்கித் திருப்பி, கதையின் தலைப்பைப் பார்க்கவும்.



"நான் முதலிரவு அறைக்குள் போனதும் அவர் என்னை இழுத்துப் பிடித்து கை, கால், மூக்கு, காது, கழுத்து... எல்லாம்...."

"முத்தம் கொடுத்தாரா...?"

"இல்லை போட்டிருந்த நகையெல்லாம் அசல் தானா என்று உரசிப் பார்க்கத் தொடங்கிட்டார்...!"

- புதுக்கோட்டை சிற்பி. சோமு.



**"ஜவுளிக் கடைல நூறு சேலை திருட்டுப் போயிருக்கிறதா புகார் குடுத்துருக்காங்க... நீ அம்பதுதான் திருடினேன்னு சாதிக்கறியே?"**

**"ஒரு சேலை எடுத்தால் ஒரு சேலை இலவசம்னு அந்தக் கடைல அறிவிச்சிருந் தாங்களே!"**

**– அம்பை தேவா**



*"நம்ம கட்சித் தலைவருக்கு எதுக்குங்க டாக்டர் பட்டம் கொடுத்தாங்க?"*

*"அட்டகாசமா சொத்து சேர்க்கிறாரே, அந்தத் திறமைக்காகத்தான்!"*

*– வி. எஸ். கணேசன்*

# கன்னியராகி

நர்மதா ஏரிக்கரை மேட்டிலிருந்து இறங்கியதுமே அவள் மன உறுதி மீண்டது.

ஓரமாக நிறுத்தியிருந்த சைக்கிளைத் திறந்து ஸ்டாண்ட் தள்ளி பத்ரிக்காகக் காத்து நின்றாள்.

சற்றுத் தள்ளி அவன் ஜீப் நின்றிருந்தது எதிர்த்திசையில். ஸைட்டுக்குப் போகிறான். தான் வீடு திரும்ப வேண்டும்.

இறங்கி வந்த பத்ரி அவளருகில் விடை பெறுவது போல் நின்றான். ஆறுதல், அனுதாபம், பிரியம் என்று உதட்டில் ஒரு கலவையான புன்முறுவல்.

நர்மதாவின் உள் மனசில் ஒரு கண்ணோட்ட மாற்றம்.

இவன் 'அட்வான்டேஜ்' எடுத்துக் கொள்வானா? இது சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தும் சாதுரியமா? ஒருவேளை வெறும் பாவனையா?

"ஓ.கே" என்று விடை பெறுவது போல் பத்ரி கையை உயர்த்தினான். கண்ணியம் மின்னியது.

சே. தனக்கு ஏன் இப்படி புத்தி போகிறது!

"தாங்க்யூ மிஸ்டர் பத்ரி!"

அவள் போட்ட 'மிஸ்டருக்கு' அவன் ஒரு ஷாக் வாங்கிக் கொண்ட பார்வையோடு "இட்ஸ் நத்திங்" என்று ஜீப்பை நோக்கி நடந்தான்.

ஜீப்பை ஸ்டார்ட் செய்ததும் கையாட்டி விட்டு ஓட்டத் தொடங்கி விட்டான்.

சைக்கிள் மிதிக்கும்போது நர்மதா மனசில் ஒரு சுய விமர்சனம்.

"எப்படி? எப்படி ஒரு ஜாக்கிரதை தவறி விட்டது? அது அந்த நொடியின் தற்காப்பு மறந்த தருணமா? இவனுக்கு தன் மீது தன்னையறியாமல் ஒரு செல்வாக்கு ஊர்ஜிதமாகி விட்டதா?

காதல் ஒரு முட்டாள்தனம். சேரன்மாதேவி தொண்டு நிறுவன மேடம் தெரேஸா சொல்வாள். அடிக்கடி.

சொந்த அனுபவமா? தெரியாது. சொன்னதில்லை. ஆனால் காதல் மயக்கத்திற்கு இரையாகி மனசில் கண்ணீர்க்குடுவை சுமக்கும் பல அபலைகளை அவள் அன்றாடம் சந்திப்பவள்.

"லூஸ் அண்ட் த்ரோ. இந்த 'டிகேடோட' மன ஓட்டம் இதுதான். எதிலயும் யூஸ் அண்ட் த்ரோ வந்தாச்சு. கேட்டா வசதிங்கறாங்க. ஸோ பெண்கள் பாரேன்! யூஸ்ட் அண்ட் த்ரோன். ஐயோ, கொஞ்சம் முன்னெச்சரிக்கை வேண்டாமா?"

அவள் தனக்குச் சொல்லவில்லை. அப்போது.

ஏனோ இப்போது பொருத்திப் பார்த்துக் கொள்ளத் தோன்றியது தன்னோடு.

ஏரிக்கரையில் பத்ரி வந்தது தற்செயல். நடந்தது எல்லாம் தற்செயல்.

தளர்ந்தோம். மீண்டோம். எதையும் இழந்து விடவில்லை.

காதலா... வாழ்க்கைத் துணை தேடலா... என்ன பெயர் அதற்கு? அது வழங்கப்பட வேண்டி



யது. இழப்பீடுகளுக்கு அது சமமாகாது.

'பத்ரி, இதுவரை ஓர் ஆண் துணையை என் மனசு தேடி ஏங்கவில்லை. நீங்கள் முன்மொழி கிறீர்கள். நிரூபியுங்கள்.

**வீ**டு திரும்பியபோது வெளித் திண்ணை யில் நிறைய ஆள் கூட்டம். ஏன்?

சைக்கிளைப் படியேற்றப் போனாள்.

"குடுங்கம்மா நான் ஏத்தி விடறேன்."

"இல்லே வேண்டாம்." அதற்குள் சைக்கிள் கைமாறி விட்டது.

உட்கார்ந்திருந்தவர்களில் நாலைந்து பேர் எழுந்து நின்றனர்.

"வணக்கம்மா" நாலைந்து கும்பிடுகள் கை உயர்த்தன.

அவளுக்கு வேடிக்கையாகப் பட்டது. பதிலுக்குக் கை குவித்தாள். உள் நடை நோக்கி நடக்கும்போது மனசில் ஓர் எச்சரிக்கை மணி. 'இதுதான் புகழ். ஜாக்கிரதை!'

நடையில் கலையரசன்.

"வாங்கம்மா, தாத்தாவை இட்டாந்துட்டோம்." சிரித்தார்.

"நன்றி" என்று நர்மதாவும் சிரித்தாள்.

சைக்கிள் தள்ளி வந்தவரிடம் "இப்படி கொடுங்க" என்று கூறி, வாங்கி மூலையில் நிறுத்தினாள்.

கைகால் முகம் அலம்பி ஒரு துண்டால் முகம் துடைத்த வாறே ஊஞ்சலை நெருங்கிய

# 15 நிலவினில் ஆடி

அனந்தாச்சாரி, நர்மதாவைப் பார்த்ததும் நின்று விட்டார்.

"தாத்தா... மீனாட்சி..." என்று சொல்ல முயன்றதை முடிக்காமல் மீண்டும் நர்மதா தகர்ந்து போனாள்.

'மீனாட்சி... மீனாட்சி... உன்னை அவ்வளவு கலபமாய்க் கடக்க முடியவில்லையே.'

துண்டைத் தோளில் போட்டவாறே விரைந்து வந்த அவர், அவள் தலையைத் தோளில் சார்த்தி முதுகைத் தட்டிக் கொடுத்தார்.

"தெரியும்மா... வர்றச்சே சொல்லிண்டு வந்தா."

நர்மதா விசும்பினாள்.

'ச்சுச்" அவர் கை ஒரு சிசுவைத் தட்டுவது போல் மென்மை ஆயிற்று.

"அழப்படாது."

கண் துடை என்று சொல்வது போல் அவர் துண்டை நீட்டினார். நர்மதா உறுதியாகத் தலையசைத்தாள்.

மீனாட்சி போராட்டக்காரி. எமங்கிட்டேர்ந்து கூட உசிரைப் பிடுங்கிண்டு வர்ற பொண்ணு... இப்ப முடியலே... ஆயுள் பலம் அவ்ளதான்."

என்ன இழந்தோம் என்பது இவருக்குத் தெரியும். எனினும்



வையவன்

இவர் கண்களில், குரலில் ஒரு விளக்கம்.

"அழுறது சரியான டிரிப்யூட் இல்லே."

'துக்கத்தைத் தடு. துயரை வெல்லு.'

அவர் பார்வை பேசிற்று.

மழைத்துளியை ஏந்திய சிப்பி போல் மனைகள் மூடி கெட்டிப்பட்டது.

அவள் முந்தானையால் கண் துடைத்தாள்.

"அவாள்ளாம் ஒரு கண்டன ஊர்வலம் நடத்தணும்னு அபிப்பிராயப்படறா." சட்டென்று விஷயம் மாற்றி வெளியே உட்கார்ந்திருந்தவர்களைக் கை காட்டினார்.

மூக்கை ஒரு முறை உறிஞ்சி, முகத்தை நன்றாகத் துடைத்துக் கொண்டாள்.

"எதுக்கு தாத்தா?"

"மீனாட்சி 'டெத்'துக்கு."

"அனுதாப ஊர்வலம்னா நடத்தணும்."

**''தன்னோட வீட்டில் உள்ள எல்லோருமே பதவியில் இருக்கணும் என்கிறதற்காகத் தலைவர் இப்படியெல்லாம் செய்யக் கூடாது...''**

**''அப்படி என்ன செஞ்சுட்டார்?''**

**''தன் அஞ்சு வயசு மகனை குந்தைகள் அணிச் செயலாளரா அறிவிச்சுட்டார்!''**

**— செந்தா**




"இல்லே இன்னிய ஸ்திதியிலே... ஏரி என்னவாயிருக்கு, மீன் என்னவாயிருக்கு.. மனுஷா என்னவாய்ண்டிருக்கான்னு மீனாட்சி எடுத்துக்காட்டு ஆய்ட்டா."

நர்மதாவின் முகத்தை ஒரு முறை பார்த்துவிட்டுத் தொடர்ந்தார்.

"நாம போராட்டம் பண்ணிட்டிருக்கோம். ஊர் ஆதரவு வேணுமோன்னா... அதான் அவாளோட நோக்கம்."

அனுதாபம் கண்டனமாகுமா? நர்மதா யோசித்தாள். ஆக்கலாம்.

"கோஷம்லாம் வேண்டாம் தாத்தா! நெறய 'ஸ்லோகன்' எழுதி அட்டையைப் பிடிச்சுண்டு மௌன ஊர்வலமாப் போனா நன்னா இருக்குமோ!"

"நல்ல ஐடியா!" அனந்தாச்சாரி சிலாகித்தார்.

"நான் போய்ச் சொல்லிடறேன்." - நகரப் போனவரை நர்மதா இடைமறித்தாள்.

"ஜெயில் வாசம் எப்படி இருந்தது தாத்தா?"

கண்ணைச் சுருக்கி அவள் கரிசனத்திற்குக் கிண்டல் தெரிவித்தார்.

"பிரிட்டிஷ்காரன் காலத்திலே கொசு கூட கூடுமானவரை அஹிம்சையைக் கடைப் பிடிச்ச மாதிரி தோணித்து."

சட்டென்று வந்த சிரிப்பை உதடு கடித்துத் தடுத்தாள்.

"சுதந்தர ஜனநாயகம் வந்துடுத்தே! கொசுக்களுக்கும் தெரிஞ்சிருக்கும்."

சிரிக்காமல் சொன்னாள்.

"சமத்து! இதான் வேண்டியது. ரீகெய்ன் யுவர் செல்ஃப்".

துண்டைக் காயப்போடப் போனவரிடம் "இப்படிக் குடுங்கோ" என்று தடுத்து வாங்கிக் கொண்டாள்.

**ம**த்தியானம் நாலு மணிக்கு ருக்மிணி மாமி வீட்டிலிருந்து பம்பரமும் கயிறுமாக ஒரு வாண்டு வந்து "நர்மதாக்கா நோக்கு ஃபோன்" என்று சொல்லி விட்டு ஒரே ஓட்டம் ஓடினான்.

தேரடி மைதானத்தில் ஒரு நிரந்தரமான பம்பர முகாமுக்கு அவன் ஒரு லீடர்.

எழுந்து ருக்மிணி மாமி வீட்டுக்குப் போய் போன் எடுத்தாள்.

சேரன்மாதேவி மேடம் தெரேஸா.

"என்ன நர்மீ, கொடியை ஏத்திப் பிடிச்சுப் பிச்சு உதறிட்டே போல..."

எடுத்த எடுப்பில் ஆகாயத்துக்குத் தூக்கினாள்.

"எங்கேர்ந்து பேசறீங்க மேடம்?"

"வேலூர்ல இருந்து."

"'வேலூர்ல இருந்தா... எப்ப வந்தீங்க? ஒரு எஸ்டிடி பண்ணப்படாதா. அட்லீஸ்ட் ஒரு இன்டிமேஷன்?"

"ஆமாம், நீ பண்ற போராட்டத்துக்கு நடுவுலே நான் புகுந்து ஒன்னை இழுத்தடிச்சுத் தொந்தரவு தரணுமோ?"

"என்ன மேடம். இன்ஸல்ட் பண்றீங்களா?"

"இன்ஸல்ட்டா... நோ. சல்யூட் பண்றேம்மா."

"டோன்ட் ஃப்ளாட்டர் மீ! எனக்கு ஒடம்பெல்லாம் நெளியறது."

"பேப்பர் நியூஸ் படிச்சீங்களா?"

"பேப்பர்லயும் பார்த்தேன். என் ஃப்ரெண்ட் ஷீலா பிரசாத்தும் சொன்னா!"

"எந்த ஷீலா பிரசாத்?"

"அவங்க ஒங்க ஃப்ரெண்டா?"

"காலேஜ்ல க்ளாஸ் மேட்ஸ்... ஹாஸ்டல்லேரும் மேட்ஸ்... மூணு வருஷம். ஆக்சுவலியம்."

அட, உலகம் இவ்வளவு சிறியதா? நர்மதாவுக்குள் ஒரு சின்ன ஏமாற்றம்.

"என்ன விஷயமா வந்திருக்கீங்க?"

"நம்ம நிவேதிதா இல்லே... ஒல்லியா கறுப்பா குள்ளமா சிட்டுக்குருவி மாதிரி பறந்துக் கிட்டே வேலை செய்வாளே... ஸ்டோர் கீப்பர்..."

"சொல்லுங்க மேடம்."

"திடீர்னு அவளுக்கு ஹிஸ்டீரியா. யூ நோ த ரீஸன். புருஷன்காரன் ஜெயில்லிருந்து வந்துட்டான். குடி, அடி, உதை, இம்சை. மறுபடியும் ஹிஸ்டீரியா வந்துடுச்சு. சி.எம்.சி. மெண்டல் ஹெல்த் சென்டர் ஞாபகம் வந்தது."

"ம்ம்ம்... அடடே..."

"ஐ காண்டாக்டட் ஷீலா. கூட்டி வரச் சொன்னா. வந்தேன். ஹாஸ்பிடல்லே அட்மிட் பண்ணியாச்சு. ஒன் மன்த் இருக்கணுமாம். நிவேதியோட அம்மாவை விட்டுட்டுக் கௌம்பறேன்."

தெரேஸாவுக்கு அந்த நிவேதிதா வலது கை. தொண்டு நிறுவனத்தின் முதுகெலும்பு.

"அவ்வளவுதான், டாடா பைபையா? நான் ஒங்களைப் பார்க்கணுமே. வந்துரட்டுமா?"

"அதுக்குத்தான் போன் பண்ணினேன். நீ வர வேண்டாம்! நிவேதி ரொம்ப அப்ஸெட் ஆயிருக்கா. நான் வர்றேன். இன்னும் ஒன் அவர்ல அங்க வர்றேன். ஓ.கே? வச்சுரட்டா...."

தெரேஸா போனை வைத்து விட்டாள்.

மேடம் தெரேஸா வரப் போகிறாள்! உற்சாக ஊசி போட்டுக் கொண்டது போல் ஒரு கிளர்ச்சி.

ருக்மிணி மாமிக்கு நன்றி சொல்லும் போது, "ஒடம்பைப் பாத்துக்கோ டீ, வீடர் ஆய்ண்டு வர்றே" என்று எச்சரிக்கை தந்தாள். கிண்டலோ?

தெரேஸா தனியாக வரவில்லை. கூட ஷீலா பிரசாதும். மஃப்டியில் வந்தாள். விண்ட் ஷீல்ட் மூடிய மெடல் க்ரே வண்ண மாருதியில்.

வெள்ளை வெளேரென்று பத்து வயதுப் பெண் மாதிரி தெரேஸாவின் குள்ள உருவம் சுறுசுறுப்பாக வீட்டுப் படி ஏறியதைத் தெருவே வேடிக்கை பார்த்தது.

அனந்தாச்சாரி, கிருஷ்ணமாச்சாரி, மஹா லக்ஷ்மி என்று ஒவ்வொருவருக்கும் ஒரு நமஸ்காரம். டக்டக்கென்று ஒவ்வொரு மனசிலும் ஒரு பிளக் மாட்டி உயிர்க்களையின் மின்சாரம் பாய்ச்சி, சுற்றி ஒரு காந்தப் பிரதேசம் உருவாக்கி, டீ பிஸ்கெட் சாப்பிட்டு விட்டு, "அந்த ஆத்தங்கரையைப் பாக்கணுமே நர்மீ" என்றாள்.

ஷீலா பிரகாத் எல்லோரையும் துருவித் துருவிப் பார்த்துக் கொண்டிருந்தவள், "அப்படியே அந்த பார்க்டரி ஸைட்டையும் பார்க்கலாமே" என்றாள்.

மணி ஐந்தரை ஆயிருந்தது.

"போலாமே!" நர்மதா எழுந்தாள்.

"வந்து டிபன் சாப்பிட்டுப் போலாம். இல்லியா?" என்று மஹாலக்ஷ்மி குறுக்கிட்டாள். அவள் முகத்தில்

# குஜ்ரால் மாஸ்கோ சென்றது எப்படி?

இந்தியத் தூதராக குஜ்ரால் மாஸ்கோ சென்றதன் பின்னணியில் ஒரு சுவாரஸ்யமான சம்பவம் உண்டு. ஒரு நாள் சஞ்சய் காந்தி, அன்றிரவு ஒன்பது மணிக்கான ஆங்கிலச் செய்தி அறிக்கையை, ரேடியோவில் ஒலிபரப்பப்படுவதற்கு முன் தமது அங்கீகாரத்துக்காக அனுப்பி வைக்கும்படி குஜ்ராலிடம் அதிகாரமாகச் சொன்னார். அப்போது குஜ்ரால் தகவல்-ஒலிபரப்பு அமைச்சர்.



மெல்லிய குரலில், ஆனால், உறுதியாக மறுத்தது மட்டுமின்றி 'சஞ்சய் காந்தி தோரணையில் யாரும் தம்மிடம் இதுவரை பேசியதில்லை' என்பதையும் சுட்டிக் காட்டினார் குஜ்ரால்.

சில நாட்களுக்குப் பின் குஜ்ராலிடம் 'சஞ்சய் மனம் புண்பட்டு விட்டதாகவும், செய்திக் குறிப்பு தயாரிப்பதில் சில நல்ல யோசனைகள் சஞ்சயிடம் இருப்பதாகவும் ஒலிபரப்பப்படுமுன் அதை அவருக்கு அனுப்பி வைப்பதில் தவறேதும் இல்லை' என்றும் கூறினார் இந்திரா காந்தி. அதை எழுத்து மூலம் உத்தரவிடுமாறு கேட்டு விட்டார் குஜ்ரால். விளைவு?

இந்திரா காந்தி குஜ்ராலை தம் மந்திரி சபையிலிருந்து கழற்றிவிட்டு மாஸ்கோவுக்கு இந்தியத் தூதராக அனுப்பி வைத்தார். குஜ்ரால் மாஸ்கோ சென்று புதிய பணியில் புகழ் சேர்த்து வெற்றிக் கொடி நாட்டியது வேறு விஷயம்.

நன்றி : 'ஹிந்து' போலியோ
தகவல் : க. மாரியப்பன்

ஒரு மலர்ச்சி.

"நோ... நோ... திஸ் ஈஸ் டூ மச்!" - மக் கோப்பையைக் காட்டி ஷீலா பிரசாத் சொன்னாள்.

"டி.எஸ்.பி. ஸ்பீக்கிங்?" என்று காரணம் காண்பது போல் தெரேஸா கேட்டாள்.

"நாட் தட்!" அவள் மறுத்தாள்.

நர்மதா சிரித்தாள்.

ஆற்று மணலில் பேக்டரி ஸைட், நர்மதா கைதான இடம் எல்லாம் பார்த்துத் திரும்பும் போது பதினாலாம் நிலவு வானில் உயர்ந்திருந்தது.

"உட்காரலாமா ஷீலா?" என்று தெரேஸா கேட்டாள். கீழே வெள்ளை மணல்.

"இங்கேயா?" ஷீலா கேட்டாள்.

"யூ ஆர் இன் மஃப்டி... மேடம் டி.எஸ்.பி."

"விடமாட்டியே நீ..." முதலில் ஷீலா உட்கார்ந்தாள்.

ஆற்று மணலும் சந்திரோதயமும் தூரத்து வாகன ஓசை தவிர மற்றபடி படர்ந்திருந்த அமைதியும் மூவரையும் சற்று மௌனமாக்கின.

"எனி ஹோப் ஆஃப் ரெகவரி?" நர்மதா கேட்டாள்.

"யாருக்கு?"

"நிவேதிக்கு..."

தெரேஸா வான் நோக்கிக் கை உயர்த்தினாள்.

"புருஷன் டார்ச்சர்... ம்ம்... கஞ்சா கடத்த ஆரம்பிச்சான். இவ எதிர்த்தா... எல்லாம் சளம்பமாயிடுச்சு. பொல்யூஷன் ஆத்துத் தண்ணிலே மட்டுமில்லே நர்மீ. மனுஷன் புத்தியிலே, சமூகத்திலே, அரசியல்லே... கூட்டத்திலே."

ஓர் ஆகாய விமானம் வெகு தாழ்வாகப் பறந்து காது கிழிக்கிற ஓசையோடு அவள் பேச்சைத் தடுத்தது.

மூவரும் அதையே பார்த்தனர். அதன் ஆதிக்கம் மங்கிய பிறகு, தெரேஸா கை நீட்டி தூரத்தில் போகும் விமானம் காட்டியவாறே தொடர்ந்தாள். "வானத்திலே காத்துலே... கார்னர் டு கார்னர்... பொல்யூஷன்."

நர்மதா, ஷீலா பிரசாத்தைப் பார்த்தாள். அவள் குனிந்து ஆற்று மணலில் சிறுமியைப் போல் டிக் போட்டுக் கொண்டிருந்தாள்.

"சுயநலம். சுக போகம். சுலபக்காசு. அதிகார வெறி... எத்தனை பொல்யூஷன்ஸ் நர்மீ..." அவள் பெருமூச்சு விட்டுத் தொடர்ந்தாள்.

"சுதந்தரத்துக்குப் பின் இப்படி பொல்யூஷனுக்கு அடிமையாய்ட்டோம். எனிவே நீ ஒரு ஃபைட் பண்றே. கங்க்ராட்ஸ். நல்லது விளையும். சுயநலம் தவிர்த்த எந்த எதிர்ப்புக்கும் ஆத்ம பலம் ஜாஸ்தி."

ஏனோ நர்மதாவுக்கு ஷீலா பிரசாத் தன் ஒவ்வொரு அசைவையும் கண்காணித்துக் கொண்டிருப்பது போல் ஒரு தன்னுணர்வு. அங்கிருந்து எழுந்து விடை பெற்று அவர்கள் கார் ஏறிப் போகும் வரை நீடித்தது.

(தொடரும்)





## நேரத்தின் மதிப்புத் தெரிய வேண்டுமா?

**ஒரு வருடத்தின் மதிப்பு என்னவென்று தேர்வில் தோல்வியடைந்த மாணவனைக் கேளுங்கள்.**

**ஒரு மாதத்தின் மதிப்பு என்னவென்று குறைப் பிரசவமான ஒரு தாயைக் கேளுங்கள்.**

**ஒரு வாரத்தின் மதிப்பை அறிய ஒரு வாரப்பத்திரிகையின் ஆசிரியரைக் கேளுங்கள்.**

**ஒரு நாளின் மதிப்பு என்னவென்று அன்று வேலை கிடைக்காமல் போன ஒரு தினக்கூலி வாங்குபவரிடம் கேளுங்கள்.**

**ஒரு மணிநேரத்தின் மதிப்பு என்னவென்று சந்திக்கக் காத்திருக்கும் காதலரைக் கேளுங்கள்.**

**ஒரு நிமிடத்தின் மதிப்பு என்னவென்று ரயிலைத் தவறவிட்ட பிரயாணியிடம் கேளுங்கள்.**

**ஒரு வினாடியின் மதிப்பு என்னவென்று ஒரு விபத்தில் உயிர் தப்பியவரைக் கேளுங்கள்.**

**ஒரு மில்லி செகண்டின் மதிப்பு என்னவென்று ஒலிம்பிக் போட்டியில் வெள்ளிப் பதக்கம் வென்றவரைக் கேளுங்கள்.**

**என்றோ, எதிலோ படித்து ரசித்தவர் : கலா**

# சர்க்கரை வியாதிக்கு சிறந்தது தெய்வீக மூலிகை மருத்துவம்!



## சர்க்கரை வியாதியின் அறிகுறிகள்

அடிக்கடி சிறுநீர் பிரிதல், பசி, தாகம், உடல்சோர்வு, உடல் எடை குறைதல், கால் குத்தல், ஆண்மைக் குறைவாதல், மயக்கம், கண்பார்வை மங்குதல், நாவறட்சி, புண் ஏற்பட்டால் ஆறாத நிலை போன்றவை ஒருவருக்கு தெரிந்தால் சர்க்கரை வியாதி உள்ளதாக கொள்ளலாம். சர்க்கரை வியாதி உடலில் தோன்றுவதற்கு கீழ்க்கண்டவைகள் காரணமாக இருக்கலாம். 1) இன்சுலின் குறைவாக சுரத்தல். 2) பரம்பரை பரம்பரையாக தோன்றுவது. 3) உடலுழைப்பிற்கு தகுந்த உணவும், உணவுக்கு தகுந்த உடலுழைப்பும் இல்லாமை. 4) அடிக்கடி கவலை கொள்வதால் உடலில் உள்ள சுரப்பிகள் நன்கு செயல்படாது இருத்தல் போன்றவை. சர்க்கரை வியாதி தோன்ற காரணமாக இருக்கலாம். சர்க்கரை வியாதிக்கு ஆங்கில வைத்திய முறையில் மாத்திரைகளைக் கொண்டு நிவர்த்தி செய்ய முயலுதல் 2) உணவு கட்டுப்பாட்டில் இருத்தல் மற்றும் இன்சுலின் ஊசி மூலம் செலுத்துதல் போன்றவை சிகிச்சை முறைகளாக உள்ளன. இவைகளில் பின் விளைவுகளும், பக்க விளைவுகளும் தோன்றலாம்.

## உணவு முறை

இந்நோயாளிகள் அவரவர் தேவைக்கு தக்க அளவு 3/4 வயிறு ஆகாரமாக ஒவ்வொரு வேளை உணவையும் உட்கொள்வது நல்லது. உணவில் ராகி, கோதுமை, கம்பு, மக்காச்சோளம் போன்ற தானியங்களை ரொட்டியாகவும், கஞ்சி, கூழ், களி போன்றவையாகவும் அடிக்கடி உபயோகிப்பது மிகவும் நல்லது. தவிர இந் நோயாளிகள் பழங்களில் இனிப்பு இருப்பதால் பழங்களை சாப்பிடக்கூடாது என்ற கருத்து நிலவி உள்ளது. இது தவறாகும். சர்க்கரை வியாதி உடையவர்கள் பச்சையாக சாப்பிடும், பழங்கள், காய்கள், பழ ஜூஸ்கள், Salads போன்றவைகளை தினம் ஏதேனும் ஒருவேளை உணவாக தேவையான அளவு பயன்படுத்தலாம். பழங்களில் 80 சதவீதம் அளவு தண்ணீர் உள்ளதாலும், இதில் உள்ள சக்திகளை முழுமையாக உடல் எளிதில் எடுத்துக் கொள்வதாலும் உடல் சோர்வு, தாகம், கண்பார்வை மங்குதல், நரம்புத் தளர்ச்சி, நாவறட்சி போன்றவைகள் முற்றிலும் மாற்றும் வல்லமை படைத்தவை. கொய்யா, ஆரஞ்சு, பப்பாளி, சப்போட்டா, வெண்டை, இளநீர், மாதுளை, மா, ஆரஞ்சு, தக்காளி, நாவல், தர்பூசணி, வெண்டை, வெள்ளரிக்காய், முட்டைக்கோஸ், வெங்காயம், கொத்தமல்லி தழை போன்றவற்றில் இருந்து ஏதேனும் இரண்டு அல்லது மூன்று வகைகளை தேவையான அளவு உட்கொள்ளலாம்.

## உடற்பயிற்சி

தினம் காலை, மாலை 15 நிமிட நேரம் எளிய உடற்பயிற்சிகள் செய்யவும். நடத்தல், குனிந்து நிமிர்தல், உட்கார்ந்து எழுதல், நின்ற இடத்தில் ஓடுதல், குதித்தல், கைகால் விரல்களை நீட்டி மடக்குதல், சைக்கிள் ஓட்டுதல் முதலியன செய்யலாம். இவ்வாறு செய்யும்போது உடல் கழிவுகள் எளிதில் வெளியேற்றும், உடல் சக்தி பெறும், ரத்த ஓட்டம் அதிகரிக்கும், உடலின் எல்லா சுரப்பிகளும் நன்கு இயங்கும். மேலும் காலை எழுந்தவுடன் இரண்டு டம்ளர் சாதாரண தண்ணீர் குடிக்கவும். கிடைக்கும்போது மழைநீர் உபயோகிக்கலாம். இது மிகவும் நல்லது. இதில் எல்லாவிதமான தாது உப்புகளும் உள்ளன. இன்சுலின் உபயோகித்துக் கொண்டிருக்கும் நிலைமையில் உள்ள சர்க்கரை நோயாளிகள்கூட மேற்கூறிய தெய்வீக மூலிகைகளையும், இயற்கை உணவுகளையும், உடற்பயிற்சிகளையும் பின்பற்றினால் மீண்டும் சீரான உடலியக்கத்தினை பெற முடியும். இன்சுலின் உபயோகிப்பதையும் தவிர்க்க முடியும்.

## தெய்வீக மூலிகை முறை

சர்க்கரை வியாதியினை போக்க தெய்வீக மூலிகை முறையில் சக்திக்குரிய வேப்பிலை, சிவனுக்குரிய வில்வம், விஷ்ணுக்குரிய துளசி, விநாயகருக்குரிய அருகம்புல், வெற்றிலை, கங்கைக்குரிய மாவிலை ஆகியவைகளை பறித்து வந்து வெய்யிலில் உலர்த்தி பொடி செய்து சலித்த பின் எல்லாவற்றையும் ஒன்றாக சம அளவுகளில் கலந்து வைத்துக் கொள்ளவும். பின் இதில் இருந்து இரண்டு டீஸ்பூன் அளவு எடுத்து சாதாரண தண்ணீரில் கலந்து உணவுக்கு ஒரு மணி நேரம் முன்பாக தினம் காலை, இரவு ஆகிய இரண்டு வேளையும் உட்கொள்ளவும். இவ்வாறு சுமார் ஆறு மாதம் தொடர்ந்து உபயோகித்தால் பூரண குணம் பெறலாம். இதில் பின் விளைவுகளும், பக்க விளைவுகள் எதுவும் கிடையாது. மேற்கூறிய மூலிகைகள் எல்லாம் கற்பக விருட்சம் என்று சொல்லத்தக்கவையாகும். ஒவ்வொன்றும் அவ்வளவு சிறப்புகள் வாய்ந்தது. இவைகள் ரத்தம் சுத்தம் செய்யும், நரம்புகளுக்கு சக்தியை கொடுக்கும், சுரப்பிகளை நன்கு இயங்க வைக்கும், நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்க செய்யும்.

இந்நோயாளிகள் எந்தரகமான மாமிச உணவுகளையும் தவிர்க்க வேண்டும். தவிர ரசாயனம் கலந்த பானங்கள், (Soft Bottle Drinks) போன்றவை, சர்க்கரை கலந்த உணவுகள், Sweets (Alwa, Cake,) போன்றவையும், புகைத்தல், மது வகைகள் போன்றவை தவிர்க்க வேண்டும். அவசரத் தொந்தரவுகளுக்கு மட்டும் இத்துடன் ஆங்கில வைத்தியம் செய்து கொள்ளலாம். நீரிழிவு நோயாளிகள் இதை சரியாக கவனிக்காமல் இருந்து விட்டால் நாளடைவில் இருதயக் கோளாறு, சிறுநீரகக் கோளாறு, இரத்த அழுத்தம், நரம்புத் தளர்ச்சி கண்பார்வை குறைதல் போன்றவைகள் ஏற்படலாம். மேலும் ஆலோசனைக்கு -


*தெய்வீக மூலிகை வைத்தியர்கள்*

**தலைமை முகவரி :** Dr.C.K.M.குருபரன் & Dr.C.K.M.சபாபதி, S/o.Dr.C.K. மாணிக்கவாசகம்

P.B. No: 30, No: 3, திருநாத முதலி நகர், (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.) 635 601 ✆ : 04179-20469, 22769.

**சென்னை கிளை :** 115, புரசைவாக்கம் நெடுஞ்சாலை, பிரின்ஸ் மேஷர் பக்கத்தில் செல்லீஸ், சென்னை-10.

இரு முகவரிகளின் ஆலோசனை நேரம் தினமும் காலை 10 to 1 மாலை 5 to 8 ✆ 6424285, 6427638


**குறிப்பு:** சென்னை, வேலூர், கடலூர், விழுப்புரம், திருவண்ணாமலை, பெங்களூர் ஒசூர், கிருஷ்ணகிரி, சேலம், ஈரோடு, கோவை, மதுரை, தஞ்சாவூர், திருச்சி, நாமக்கல், ஆம்பூர், காஞ்சீபுரம், தர்மபுரி, திருப்பூர், உடுமலைபேட்டை, திண்டுக்கல், தூத்துக்குடி, திருநெல்வேலி, நாகர்கோவில், விருதுநகர், கரூர் போன்ற நகரங்களில் வைத்தியரை நேரில் சந்திக்க முகாம்-விவரம் தெரிந்து கொள்ள மேலே உள்ள முகவரிக்கு கடிதம் (அ) போன் மூலம் தொடர்பு கொள்ளவும்.

**தகவல்:** டாக்டர் அவர்களின் மூலிகைகள் பற்றிய 22 வருட அனுபவ ஆராய்ச்சிகள் அடங்கிய 'எளிய முறையில் பிணி அகற்றும் தெய்வீக மூலிகைகள்' என்ற புத்தகத்தினை பதிவுத்தபாலில் பெற ரூ.60/-ம் இயற்கை உணவுகளின் பெருமைகள், அதிசய உண்மைகள் அடங்கிய 'என்றும் இளமை காக்கும் இயற்கை உணவுகள்' என்ற புத்தகத்தினை பதிவுத் தபாலில் பெற ரூ.55/-ம் மூலிகை மகிமை பற்றிய ஆடியோ கேசட்டை பெற ரூ.45/-ம் தலைமை முகவரிக்கு D.D. அனுப்பவும்.

● ப. மூர்த்தி, பெங்களூர் – 21.

? குரு பாரதிராஜாவைத் தாக்கி சிஷ்யர் பாக்யராஜ் அறிக்கை விட்டிருப்பது பற்றி...?

! பாக்யராஜ் தாக்குவது குருவையோ அல்லது அவரது கலைத்திறனையோ அல்ல. அவர் சார்ந்திருக்கும் அணியின் ஏகாதிபத்திய போக்கைத்தான்.

● எம். காமராஜ், பிச்சாண்டார்கோவில்.

? 1997 ஆம் ஆண்டுக்கான ராஜா சர் அண்ணாமலை செட்டியார் விருது டாக்டர் எம். எஸ். உதயமூர்த்திக்குக் கிடைத்திருப்பது குறித்து...?

! வடசென்னையில் எம்.எஸ். உதயமூர்த்திக்கும் தென் சென்னையில் டி.கே. பட்டம்மாளுக்கும் (தமிழிசைப் பணிக்கு) ராஜா. சர் விருது ஒரே நாளில் வழங்கப்பட்டிருக்கிறது. இருவருமே அவரவர் துறைகளில் சாதனையாளர்கள். வாழ்த்துவோம்.



• தாக்குதல்....



• ...இலக்கு!

● ஜே. கண்ணன், சென்னை – 101

? ஒப்பிடுக – வீரப்பனின் மீசை; தேவாரத்தின் மீசை....

! கோபாலை ஏன் விட்டீர்கள்? அவருடையது மட்டும்தானே வெற்றி மீசை!

● எம். பிரபு, குமராட்சி அஞ்சல்.

? அரசியல்வாதிகள் தங்கள் உண்மையான வாழ்க்கை வரலாறை நூலாக எழுதினால்?...

! ராஜேஷ்குமார், பிரபாகர், சுபாவுக்கு மார்க்கெட் இருக்காது!

# அரசியல்வாதிகள் உண்மையான வாழ்க்கை வரலாறு எழுதினால்..?

● வசந்தா சித்திரவேலு, கருப்பம்புலம்.

? அயோத்தியில் ராமர் கோயில் கட்டியே தீருவோம் என்கிறாரே உ.பி. முதல்வர் கல்யாண் சிங்?

! யாராவது ராமர் மாதிரி வாழ்ந்து காட்டுவதாகச் சவால் விடுகிறார்களா, பாருங்கள்!

● மு. கருணாநிதி, தேவராயனேரி.

? சஹாரா கோப்பையை வென்று விட்டோம் என்கிற மகிழ்ச்சியை விட, பரம எதிரி பாகிஸ்தானைத் தோற்கடித்து விட்டோம் என்ற சந்தோஷம்தான் என்னைக் களிப்படையச் செய்கிறது... தராசுக்கு எப்படி...?

! இதுமாதிரியான கோணல் சந்தோஷம் யாருக்குமே ஏற்படக் கூடாது என்பதே என் ஆசை.

● எஸ். சாந்தி, காட்பாடி.

? அரசியலில் தாக்குப்பிடிக்கவே முடியாது. ஆகவே அரசியலுக்கு வரவேண்டாம் என்று நாஞ்சிலார் ரஜினிக்கு யோசனை கூறியுள்ளாரே?

! ரஜினியால் தாக்குப்பிடிக்க முடியாதா? அல்லது ரஜினி வந்தால் மற்றவர்களால் தாக்குப்பிடிக்க முடியாதா?!...

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன்கோட்டை.

? ஆதி திராவிடர்களுக்கு எதிராக கல்யாண் சிங் செயல்படுவதாக மாயாவதி கர்ஜித்திருக்கிறாரே?

! ஆதி திராவிடர்களுக்கான சிறப்புப் பாதுகாப்புச் சட்டம் என்பதாக ஒன்று உ.பி.யில் உள்ளது. அது துஷ்பிரயோகமாகாமல் இருக்க வேண்டும் என்பதுதான் கல்யாண் சிங்கின் கருத்து. அந்தச் சட்டத்தைப் பயன்படுத்தி, ஆயுத லைசென்ஸ் கூட வழங்குமாறு செய்து வந்தார் மாயாவதி. இதுபோன்ற

• ...பெறுபவர்கள்....





• வாழ்த்து....



• யார்....



• ...மீசை....



• ...அழகு...?

ஆபத்தான செயல்பாடுகளைத் தவிர்ப்பதே இன்றைய முதல்வரின் நோக்கம். ஆனால் கல்யாண் சிங் ஆட்சியில் அமர்ந்ததும் அவசர அவசரமாக இந்தச் சுற்றறிக்கையை அனுப்பி யது, அவர் ஏதோ ஆதி திராவிடர்களுக்கு எதி ராகச் செயல்படுவது போன்ற எண்ணத்தை உருவாக்கி விட்டது. கல்யாண் சிங் இன்னும்



• தப்புக் கணக்கு....



• ...கர்ஜனை!

நிதானத்துடன் செயல்பட்டிருக்கலாம்.

● ஏ. சுகுமார், காட்டுக்கானூர்.

*? 'பத்திரிகையாளர்களிடம் எல்லா உண்மைகளையும் கூறுவதில்லை' என்று சு. சுவாமி சொல்லியிருக்கிறாரே...?*

! பாதி உண்மைகளைக் கூறுவது என்பது பொய் சொல்வதற்கு ஒப்பானதுதான் என்பது சு. சுவாமிக்குத் தெரியும். தெரிந்துதான் சொல்கிறார் – பத்திரிகையாளர்களிடம் மட்டு மல்ல...

● எம். இராஜேந்திரன், வால்குடி.

*? ஐந்து பேர் அமர்ந்து செல்லும் ஆட்டோ தமிழ்நாட்டில் ஓடப் போகிறதாமே!*

! நெரிசல் ஒருபுறமிருக்க, பஸ் கட்டண உயர்வு வேறு இடியாகத் தாக்கியுள்ளபோது, சராசரி பயணிக்கு இந்த ஐந்து பேர் அமரும் ஆட்டோ உதவியாய் இருக்கக்கூடும். ஐவர் கட் டணத்தைப் பகிர்ந்து கொண்டால், நேரத் தோடு போய்ச் சேரலாம்; கட்டணமும் அதிக மாயிராது; வசதியான பயணம்! இதெல்லாம் தெரிந்தும் அரசு இதற்கு அனுமதி தர யோசிப் பது வியப்பாக உள்ளது.

● இரா. இராமசாமி, திருவண்ணாமலை. ❑

*? சுவரின்றிச் சித்திரமா? தீமையின்றி நன்மையா...? இதற்குத் தராசு தருகின்ற விளக்கம்...?*

! அரசு, திட்டமிட்டுத்தான் பொது விநி யோக முறை மூலம் மக்களுக்கு உணவுப் பொருட்களை மலிவு விலையில் தர முடியும். ஆனால் பாருங்கள், இதுபற்றி விவாதிக்கக் கூடி, முடிவெடுக்காமல் கலைந்த 350 பேருக்கு, டெல்லியில் அறு சுவை விருந்து படைக்க மட்டும் மத்திய அரசு ஒன்றேகால் லட்சம் ரூபாய் மக்கள் வரிப்பணத்தைச் செலவிட்டிருக்கிறது. மாநாட் டின் இதர செலவுகள் வேறு!

● த. தாமோதரன், சேலம் – 6.

*? என்ன சார், சஹாரா கப்லயாவது ஜெயிச்சாங்கன்னு சந்தோஷப்பட்டா, 'அதெல்லாம் இல்லை; இது முன்கூட்டியே பேசி வைச்சுக்கிட்டு ஜெயிச்சதுதான்' என்று பாக் பத்திரிகைகள் சொல்லியிருக்காமே...?*

! யானைக்கும் சறுக்கும் என்று கம்பீரமாகச் சொல்லிவிட்டுப் போவதற்குப் பதில் நொண் டிக் குதிரைக்குச் சறுக்கினது சாக்கு என்ற பாணியில் புலம்புவது அசிங்கம். இதைப் பாக். பத்திரிகைகள் புரிந்துகொள்ள வில்லையே! இப்படிப்பட்ட ஆதாரமற்ற குற்றச்சாட்டுகள் கிரிக்கெட் ஆட்டத்தை மேன்மேலும் மாசு படுத்தவே செய்யும். அடுத்த தொடரின் இரண் டாவது மாட்சில், கராச்சி பார்வையாளர்கள் நடந்து கொண்டவிதம் இதையே காட்டிக் காட்டுகிறது. அம்பயர் ரியாஸுடின் அஃபிரி வுக்கு அவுட் தராமல் அழுகுணி அடித்தது, இதை மேலும் வலியுறுத்துகிறது.

● ஆர். பார்த்திபன், சேத்துப்பட்டு.

*? சமீபத்தில் படித்த புத்தகம்?*

! சி. சு. செல்லப்பா எழுதிய 'சுதந்திர தாகம்'. கிட்டத்தட்ட 1700 பக்கங்கள் கொண்ட, மூன்று பாகங்களிலான நாவல். சுதந்தரப் போராட்ட நிகழ்வுகளை இத்தனை அற்புதமாக ஒரு நாவலில் பதிவுசெய்திருப்பதைப் பாராட்டா மல் இருக்க முடியாது. ஏராளமான எழுத்துப் பிழைகள் என்றாலும் அவற்றைச் சகித்துக் கொண்டு அனைவரும் படிக்க வேண்டிய நாவல். நானூறு ரூபாய் கொடுத்து வாங்க முடியாவிட்டாலும் நூலகத்திலாவது படிக்க வேண்டும்.

● ஏ.ஜி. கல்யாணசுந்தரம், கோவை – 6.

*? பிறர் செய்த தவறை மறப்பது அல்லது மன்னிப்பது – எது சாத்தியம்?*

! மன்னித்துவிட்டால் மறந்தும் விடுவதுதான் பண்பாடு.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
இரா. இராமசாமி,
ஸ்ரீ ரமணாசிரமம்,
திருவண்ணாமலை - 606 603.

# நான் வில்லன் அல்ல!

'வேலைக்காரி' - படத்தில நியாயமா பார்த்தா நான்தான் ஹீரோ. ஆனா வெளியில தெரிஞ்ச பெயர் கே.ஆர். ராமசாமி. அறிஞர் அண்ணாவோட முதல் படம் அது. நான் அதில ரெண்டு வேஷம் பண்ணினேன். மூர்த்தின்னு ஹீரோ ரோல். அதேபோல ஹரிஹரகோஷ்னு வில்லன் போல ஒரு ரோல்.

அப்ப அண்ணா, எஸ்.எஸ்.ஆரை பலமா சிபாரிசு பண்ணினார். மூர்த்தி ரோல அவரு பண்ணணும்னு அண்ணா சொன்னார். 'வேணாம்... நம்பியாரே பண்ணட்டும்'ன்னு ஜுபிடர்ல சொல்லிட்டாங்க.

'நம்பியார்தான் ஹரிஹரகோஷ் போட றாரே' - அண்ணா சொல்லிப் பார்த்தார்.

'ரெண்டு ரோலையும் நம்பியாரே பண் ணட்டும்'ன்னு ஜுபிடர் பிக்சர்ஸ்ல கண் டிப்பா சொல்லிட்டாங்க. அண்ணாவுக்கு அதுதான் முதல் படமானதால அவரால மேற்கொண்டு எதுவும் பேச முடியாம போச்சு. அந்தப் படத்தில எஸ்.எஸ்.ஆர். நடிச்சிருந்தா அப்பவே அவரு ஹீரோ ஆயிட்டிருப்பாரு.

தியாகராஜ பாகவதரும், என்.எஸ். கிருஷ் ணனும் தப்பு எதுவும் பண்ணாம ஜெயிலுக்குப் போனாங்க. அவங்க கெட்ட காலம் ரெண் டரை வருஷம் ஜெயில்ல இருக்க வேண் டியதாப் போச்சு.

பாகவதர் வெளியே வந்ததும் ஒரு படம் எடுக்க ஆரம்பிச்சார். பூனாவில ஷூட்டிங். அதில எனக்கு ஒரு ராஜகுரு ரோல். நான் டிராமா கம்பெனியில ராஜகுரு ரோல் பிரமாதமாப் பண்ணேன்னு பாராட்டி, அந்த மாதிரி ஒரு ரோலை எனக்காகவே கதையிலே உருவாக்கினாங்கன்னு பின்னாலதான் தெரிஞ்சுது.

மீனாட்சி சுந்தரம்னு ஒருத்தர் என்கிட்ட வந்து பேசினார்:

"நீங்க மூணு தரம் பத்து பத்து நாள் பூனா வந்து போனீங்கன்னா உங்க வேலையை முடிச்சிடுவோம்."

நான் சோமு அண்ணன்கிட்டே கேட் டேன். அவர் சொன்னார்.

"மிஸ்டர் நம்பியார், ரொம்ப சந்தோஷம். ஆனா நீங்க அவங்களை இங்கே வந்து படம் எடுக்கச் சொல்லுங்களேன். நீங்க ஏன் பூனா வுக்குப் போவணும்?"

"நான் எப்படிண்ணே இதைச் சொல்ல முடியும். நான் சாதாரண நடிகன்."

"நீங்க ஏன் அப்படி உங்களைப் பத்தி குறைவா நெனைக்கிறீங்க? நீங்க பெரிய ஆர்ட் டிஸ்ட்டுனுதானே அவங்க உங்களைத் தேடி வந்து கூப்பிடறாங்க. இது ஏன் உங்களுக்குப் புரிய மாட்டேங்குது?"

தவிர இதில இன்னொரு விஷயம் என் னன்னா பாகவதரை வச்சி ஜுபிடர்ல ஒரு படம் பண்றதா இருந்தாங்க. ஆனா ஜெயில் விவகாரம் வந்தப்போ குடுத்த அட்வான்ஸை திருப்பி வாங்கிட்டாங்க. அதனால ரெண்டு கம்பெனிக்கும் தகராறு. என்னால அந்தப் படத்தில நடிக்க முடியாம போச்சு.

இதில இன்னும் வேதனை என்னன்னு கேட்டா அப்போ நான் ஜுபிடர்ல ஐயாயிரம் ரூபாய் வாங்கிண்டிருந்தேன். பாகவதர் கம்பெனியில அந்தப் படத்துக்கு எனக்கு பேசப்பட்ட சம்பளம் பதினையாயிரம் ரூபாய். எவ்வளவு வித்தியாசம் பாருங்க. என்ன பண்றது? எனக்குக் கொடுத்து வைக்கலியே!

ஜுபிடர்ல என்னை ஒப்பந்தம் செய் தப்போ எனக்குத் தெரியாம ஒரு ஷரத்து சேர்த் திருந்தாங்க. அதாவது அவங்க பர்மிஷன் இல் லாம நான் வேற கம்பெனி படங்கள்ல நடிக்கக் கூடாதுன்னு கண்டிஷன். இப்படி ஒரு ஷரத்து இருக்கறது தெரிஞ்சப்போ நான் அந்த மானே ஜரைக் கேட்டேன். 'அட, சும்மா அது ஒரு இதுக்குதாங்க. நீங்க இங்கேயே நாலஞ்சி படத் தில் நடிச்சி பிஸியா இருக்கப் போறீங்க. அப்ப எப்படி வெளிப்படத்தில உங்களால நடிக்க முடியும். அட, அப்படியே ஒண்ணு ரெண்டு படத்தில நடிக்கிறேன்னு நீங்க கேட்டா நாங்க என்ன வேணாம்னா சொல்லப் போறோம்?"

9

தோல்வி அடைய காரணமா இருந்தாரே அந்த நம்பியார்தானே?'' எனக்கு ஒரு நிமிஷம் ஒண்ணுமே புரியல்ல.

''சார்... நான் காரணமா? - எனக்கும் அந்தப் படத்துக்கும் என்ன சார் சம்பந்தம்... நான் அதில நடிக்கவே இல்லியே?''

''நீங்க 'கவியின் கனவு' டிராமாவில ராஜகுரு அருமையா பண்ணீங்கன்னுதான் நாங்க அதேபோல ஒரு வேஷத்தை உங்களை மனசில வச்சி டெவலப் பண்ணியிருந்தோம். நீங்க நடிக்காம போனதால அந்த ரோலை எம்.ஆர். சுவாமிநாதனுக்குக் கொடுத்தோம். அப்ப ரோலை மாத்தி எழுதினதிலே எல்லாமே கோளாறா போச்சி. அதனாலதான் சொல்றேன். படம் ஃபெயிலியருக்கு நீங்கதான் காரணம்.''

'' இதை நான் ஒரு பாராட்டாகவே எடுத்துக் கொண்டாலும் எனக்கு சான்ஸ் கிடைக்காம போச்சே, படமும் சரியா ஓடலியேன்ற வருத்தம் அதிகமாகத்தான் இருந்தது. அந்தப் படம் மட்டும் நல்லா ஓடியிருந்தா பாகவதருக்கு ஒரு மறுவாழ்வு கிடைச்சிருக்கும்.

# எம்.என். நம்பியார்

எல்லாம் சேர்ந்து எனக்கு ஒரு படம் கிடைக்காம போச்சு.

**கோ**வையில ராஜா தியேட்டர்ல சோமு அண்ணன், நான், எம்.ஜி.ஆர், ஏ.எஸ்.ஏ. சாமி எல்லாம் ஒரு படம் பார்க்கப் போயிருந்தோம். பானுமதி, எம்.கே. ராதா நடிச்ச படம். பேர் ஞாபகமில்லை.

அங்கே போனப்போ நாற்காலியில் ஒருத்தர் பந்தாவா உக்காந்து சிகரெட் ஊதிக்கிட்டே இருந்தார். அவர்தான் ராஜா சந்திரசேகர் தம்பி ரகுநாத். அந்தக் காலத்தில் ரொம்பப் பெரிய டைரக்டர், எடிட்டர். நான் நடிக்க முடியாம போச்சே, பாகவதர் படம் அதுகூட அவரோட டைரக்ஷன்தான்.

என்னை அவர்கிட்ட அறிமுகப்படுத்தி வச்சாங்க. ''இவர்தான் மிஸ்டர் எம்.என். நம்பியார்.''

''ஓ... இவர்தானா அது... அந்தப் படம்

**கோ**யமுத்தூர்ல எம்.ஜி.ஆர்கூட டான்ஸ்மாஸ்டர் குமார் எப்பவும் ரொம்ப ஃபிரண்டா கூடவே இருப்பார்னு சொன்னேன் இல்லியா? அவங்ககூட நானும் போய் சேர்ந்தேன். எல்லாம் ரொம்ப குளோஸாயிட்டோம். குமாருக்கு கல்யாணம் முடிவாச்சி. நானும் எம்.ஜி.ஆரும் கல்யாணத்துக்குப் போயிருந்தோம். மறக்க முடியாத அனுபவம் அது.

'பழைய அங்காடி'ன்னு ஒரு ரயில்வே ஸ்டேஷன். அங்கே ஆளுங்க ஏறுராங்களோ இல்லியோ, கருவாடு நெறய ஏறும். நாத்தம் பிடுங்கும். நாத்தம்னு நான் சொன்னா கருவாடு ரசிகர்களுக்குக் கோவம் வரும். என்ன பண்றது'

அங்கே இறங்கி அஞ்சு மைல் நடக்கணும். கிலோமீட்டர் இல்ல... மைல்.

நான் ராத்திரியெல்லாம் ரயில்ல அரட்டை அடிச்சி தூங்கவே இல்ல. எம்.ஜி.ஆர். கொஞ்ச

நேரம் அரட்டையில தலை காட்டிட்டு மேல ஒரு பெர்த் காலியா இருந்ததைப் பார்த்துட்டு அங்கே போய்ட்டார்.

மறுநாள் மத்தியானம் அந்த ஸ்டேஷன்ல இறங்கினோம். ரெண்டு பேர் லக்கேஜும் சேர்த்து ஒரு பெட், ஒரு பெட்டிதான். நான் ஒண்ணு, எம்.ஜி.ஆர் ஒண்ணு தூக்கிக்கிட்டு நடந்தோம்.

மாப்பிள்ளை வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தப்போ எனக்கு அசதின்னா அசதி அப்படி ஒரு அசதி. நாங்க இன்னும் வரலியேன்னு மாப்பிள்ளை குமார் காத்திருந்தார்.

'என்ன மாப்பிள்ளை. இங்கே குளிக்க வசதி இருக்குமா?' மெதுவா கேட்டேன்.

"குளிக்கவா? குடிக்கவே இங்கே தண்ணி கிடையாது. ம்... டைம் ஆச்சு. கிளம்புங்க. உங்களுக்குத்தான் காத்திருக்கோம்."

அங்கிருந்து கல்யாண வீட்டுக்குப் போறோம்.

ஏற்கெனவே அஞ்சு மைல் நடந்தாச்சு. 'எங் கேப்பா கல்யாண வீடு'ன்னு கேட்டா : 'இதோ வந்துடுதுங்க'ன்னுதான் பதில் வந்துகினே இருந்ததே தவிர வீடு வரலை.

தூர ஒரு விளக்கு வெளிச்சம்.

அதுவா வீடுன்னு கேட்டேன்.

'இல்லீங்க. அது பையனூர் ரிவர். அதுக்குப் பக்கத்திலதான்.'

'அப்ப... ஆத்தைத் தாண்டணுமா?'

'அதெல்லாம் வாணாங்க.... படகுல போயிடலாம்.'

தாண்டினோம். நடந்தோம். நடந்தோம்...

எப்ப கேட்டாலும் வஞ்சனையில்லாம கிடைச்ச ஒரே பதில் 'இதோ வந்துடும். கவலைப்படாதீங்க.'

நானா கவலைப்பட்டேன். கால்தானே கவலைப்பட்டது. 'ஏங்க இப்படி போய்க்கிட்டே இருந்தா பாம்பேயில இருக்கிற மலபார் ஹில்லே வந்துடும் போலிருக்கே.'

கடைசியா ராத்திரி பத்து மணிக்கு போய்ச் சேர்ந்தோம். தூக்கம் கண்ணை சொக்குது.

சரியா அஞ்சு அடி நீளம், ஒரு அடி அகலத்துக்கு ஒரு பெஞ்ச் கிடைச்சது. அதில நானும் எம்.ஜி.ஆரும் ஒருத்தர் தலை இந்தப் பக்கம், இன்னொருத்தர் அந்தப் பக்கம்னு வச்சி ஒருத்தர் மேல ஒருத்தர் காலைப் போட்டுக்கிட்டு அன்னிக்கி அங்கே தூங்கினோம்.

மறுநாள், போன வழியிலேயே திரும்பவும் நடை. குமார் வீட்டுக்கு வந்து சேர்ந்தோம்.

'ரெண்டு மைல்ல குளம் இருக்கு. குளிச்சிட்டு வந்தா கால்ல பிடிச்சிருக்கிற தசையெல்லாம் லூஸ் ஆவும்'ன்னு சொன்னார் குமார்.

நேற்றைய அனுபவம் அதுக்குள்ளேயா மறந்துடும். இந்த 'ரெண்டு மைல்... இதோ வந்துடுங்க...' விவகாரமே வேணாம்னு கும்பிடு போட்டேன்.

இங்கே இன்னொரு முக்கியமான விஷயம் சொல்லணும்.

குமார் கல்யாணத்துக்குப் போனப்போ எனக்கு இன்னொரு பிளானும் இருந்தது. நான் கல்யாணம் பண்ணிக்கிறதா முடிவு செய்திருந்த பெண்ணையும் போய்ப் பாத்துட்டு வந்திடணும்னு பிளான்.

நாலு வருஷத்துக்கு முன்னாடியே 'இந்தப் பொண்ணுதான் எனக்கு'ன்னு அம்மா முடிவு பண்ணியாச்சி. ஆனா நான் பாக்கலை. பாக்கணும்னு ஆசை.

குமார் கல்யாணத்துக்குப் போறதுக்கு முன்னாடி ஒரு லெட்டர் எழுதிப் போட்டேன். 'இன்ன தேதியில வரேன்'னு. இங்கேதான் நடந்து நடந்து கால் பங்ச்சர் ஆயிப் போச்சே- எங்கே போறது?

"இல்லேல்ல... நாம கண்டிப்பா போயி பெண்ணைப் பாத்திட்டு வந்திடணும்" என்று எம்.ஜி.ஆர் ரொம்ப வற்புறுத்திச் சொன்னார். ஆனா என்ன கஷ்டம்னா அந்த ஊர்ல மெயில் நிக்காது. பாசஞ்சர் டிரெயின்ல போய் பெண்ணைப் பார்த்துட்டு திரும்பவும் இங்கே வந்து பழைய அங்காடி ஸ்டேஷன்ல கருவாடு நாத்தத்தில யார் படுக்கறதுன்னு நான் வேணாம்னு சொல்லிட்டேன்.

1946ல் ஒரு பயங்கர மழை நாள்ல நான் கல்யாணம் செய்துக்கிட்டேன். அதே பொண்ணுதான். ருக்மணின்னு பேரு.

நான் கொஞ்ச நாள் தள்ளியே பண்ணியிருந்திருப்பேன். ஏன் அவசரமா செஞ்சிக்கிட்டேன்னா அதிலேயும் ஒரு கிளைக்கதை இருக்கு.

கோயம்புத்தூர்ல ராமநாதபுரத்தில டிராமா கம்பெனி வீடு எடுத்து தங்கியிருந்தப்போ ஒரு சின்ன எபிஸோட்.

கம்பெனியின் பெரிய சமையல்காரன் ஒரு கம்ப்ளெயிண்ட் பண்ணான்.

'தினமும் யாரோ ஒருத்தன் மொட்டை மாடியில நின்னுக்கிட்டு பக்கத்து வீட்டையே முறைச்சிப் பாத்துக்கிட்டிருக்கான்."

எனக்கு கர்ர்னு இருந்தது. ஏன்னா நான் மொட்டை மாடியில இருந்து இயற்கைக் காட்சிகளையெல்லாம் பார்த்து ரசிப்பேன். எனக்கு இன்னிக்கும் அந்தப் பழக்கம் உண்டு. ஒரு வியாதின்னுகூட அதைச் சொல்வேன்.

"மொட்டை மாடியில் நின்னது நான்தானேப்பா"ன்னு நான் கேட்டேன்.

"நீங்க இல்லீங்க... வேற ஆள்"ன்னான். கடைசியில பார்த்தா அவன் பொய் சொல்லியிருக்கான். சின்ன சமையல்காரனை விரட்டி விடணும்னு அவன் இப்படி ஒரு வதந்தியைக் கிளப்பி விட்டிருக்கான்.

'கம்பெனி வீட்ல ஒரு பிரம்மச்சாரியா இருக்



சுனில்தத், ஜானிவாக்கர், ரஜினிகாந்த் – இவர்கள் மூவருமே நடிகர்கள்தான் என்பது தெரியும். இவர்கள் மூவருக்குமே இரு ஒற்றுமைகள் உண்டு. ஒன்று, தங்கள் மாநிலத்தை விட்டு வேறு மாநிலத்திற்குச் சென்று சாதனை படைத்தவர்கள் என்பது. இரண்டாவது, மூன்று பேருமே கண்டக்டர்களாகப் பணியாற்றியவர்கள்!

ஆதாரம்: வியக்க வைக்கும் அதிசய உண்மைகள்.

தகவல்: விருத்தாசலம் ரமேஷ்பாபு

கறதனால இப்படியெல்லாம் பிரச்னை ஏதாவது வரலாம். எதுக்கு வம்பு? நமக்கோ ரெடிமேடா பொண்ணு இருக்கா. கல்யாணம் பண்ணிக்கலாம்'னு ஊருக்கு லெட்டர் எழுதினேன்.

"உடனடியா எனக்குக் கல்யாணம் பண்ணி வையுங்க."

குமார் கல்யாணத்துக்கு நான் நடந்தேன்– நடந்தேன்னு சொன்னேன் இல்லியா! அதில பாதி தூரம் என் கல்யாணத்துக்கும் நடந்திருப்பேன்.

எங்க ஊர்ல இருந்து பொண்ணு ஊருக்கு வர எட்டு மைல் நடக்கணும்.

கல்யாணத்துக்கு எம்.ஜி.ஆரும், குமாரும் வந்திருந்தாங்க. எல்லாம் நல்லபடியா முடிஞ்சுது.

**நா**ன் அடிக்கடி மருதமலைக்குப் போவதுண்டு. என் நண்பர் சின்னப்பான்னு ஒருத்தர். எக்ஸர்சைஸ் எல்லாம் பண்ணி உடம்பை நல்லா வச்சிருப்பார். தேவர் குலத்தைச் சேர்ந்தவர். அப்ப ஜுபிடர் பிக்ஸர்ஸ்ல அறுபது ரூபா சம்பளக்காரர்.

அவரும் நானும் சைக்கிள் எடுத்துக்கிட்டு மருதமலைக்குப் போவோம். பதினொரு மைல் கோயம்புத்தூர்ல இருந்து போவணும். நானும் சின்னப்பாவும் சளைக்க மாட்டோம்.

ஆமா, பின்னாடி தேவர் பிலிம்ஸ் சாண்டோ எம்.எம்.ஏ. சின்னப்பா தேவர்னு பிரபல தயாரிப்பாளரா வந்தாரே அதே சின்னப்பாதான் அவர்.

**ச**க்தி நாடக சபையில இருந்து விலகி வந்ததையும் இங்க சொல்லணும். நாகப்பட்டினத்தில் இருந்து கம்பெனி அடுத்த கேம்ப்க்கு புறப்பட்டபோது, நான்கூட போகல்ல. ஏன்னா நடுவில எனக்கு வயிறு சரியில்லாம ரொம்ப சிரமப்பட்டேன். அதனால நாகப்பட்டினத்தில் நான் ஏற்கெனவே பார்த்த டாக்டர் கிட்டவே செக் அப்புக்குப் போனேன்.

முதல் தடவை நான் ஆஸ்பத்திரியில் இருந்தப்போ என் படுக்கைக்குப் பக்கத்திலேயே எப்பவும் இருப்பார்னு சொல்லியிருந்தேன் இல்லியா, அந்த ருத்ராபதி பிள்ளை வீட்ல தங்கினேன். மீன் நாத்தம் தாங்கலே. அப்புறமா தண்டபாணி செட்டியார்னு ஒரு நண்பர் வீட்ல இருந்தேன். அப்ப டைரக்டர் ஏ.எஸ்.ஏ. சாமிகிட்ட இருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது.

'இனி வரும் படங்களில் நடிப்பதற்கு தங்களுக்குச் சந்தர்ப்பம் தர வேண்டும் என்பது எங்களது அவா. இத்தனாம் தேதியில் நடக்க இருக்கும் பூஜையில் தவறாம கலந்து கொள்ள வேண்டுகிறேன். சோமு அண்ணனும் அதையே விரும்புகிறார்'னு அதில் எழுதியிருந்தது. பூஜைக்கான தேதியும் எழுதியிருந்தார்.

இதுக்குள்ள நான் கம்பெனியை விட்டு ஓடிட்டேன்னு சக்தி நாடக சபையில் எல்லாரும் முடிவு பண்ணிட்டாங்க.

கம்பெனிக்குப் போனேன். அப்ப திண்டுக்கல்ல முகாம். அன்னிக்கு 'கவியின் கனவு' நாடகம் நடந்தது. ஆடியன்ஸ்ல ஒருத்தனா டிராமா பார்த்தேன். நான் போட்ட வேஷத்தை செல்லப்பான்னு ஒருத்தன் போட்டிருந்தான். நல்ல நடிகன்தான். அந்த வேஷத்தில எடுபடலே.

அடுத்தநாள் காலைல சக்தி கிருஷ்ண சாமியைப் பார்த்தேன்.

'கம்பெனியை விட்டுப் போறேன்'னு சொன்னேன்.

'சரி... பணம் ஏதாவது வேணுமா'ன்னு கேட்டார். என் கையில அப்ப நூறு ரூபாதான் இருந்தது. இருந்தாலும் ஜம்பமா 'அதெல்லாம் ஒண்ணும் வாணாம்'னு சொல்லிட்டேன்.

அந்தக் காலத்தில ஒரு டிராமா கம்பெனியை விட்டு ஓடிப் போறதுதான் வழக்கம். முறையா யாரும் சொல்லிட்டுப் போறதில்லே. ஆனா நான் சொல்லிட்டு விலகினேன்.

குதிரை வண்டியில நான் ஸ்டேஷனுக்குப் போனப்போ எல்லாரும் சேர்ந்து ரொம்ப கவலையா அழுத கண்களோட வழியனுப்பினாங்க. வண்டி பின்னாடியே கம்பெனியில எங்கூட நடிச்ச பசங்கல்லாம் 'அண்ணா எங்களை விட்டுட்டுப் போவாதீங்க. எங்களுக்கு யார் இருக்கா' அப்படீன்னு அழுதாங்க. நானும் அழுதேன்.

ராமர் வனவாசம் போனப்போ அயோத்தியின் போல அந்தக் காட்சி இன்னமும் என் ஞாபகத்தில இருக்கு. தமாஷ் இல்ல. உண்மையிலேயே நான் அன்னிக்கு அப்படிதான் ஃபீல் பண்ணினேன்.

(தொடரும்)

# நடக்குமென்பார், நடக்கும்!

### மேஷம் :



*(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

கொஞ்சநாளா இனம் புரியாத குழப்பம், கவலைகளால கஷ்டப் பட்டுட்டு இருந்திருப்பீங்களே? மனசுல எப்பவும் ஒரு அதைரியம், பயம் இருந்துட்டே இருக்கும் இல்லியா? இனிமே அதெல்லாம் சரியாப் போயிடும். காம்ப்ளான் பாய் மாதிரி உற்சாகமா துள்ளிக் குதிக்க வேளை வந்திரிச்சி. நட்டு சேர்க்கை, சந்தோஷ உலா, மனசுக் குப் பிடிச்ச சம்பவங்கன்னு பலன் இப்ப நல் லாவே இருக்கும். வாரக் கடைசில உடம்பு சரி யில்லாம மக்கர் பண்ணும். அதிக அலைச் சலைத் தவிர்த்திங்கன்னா அந்தப் பிரச்னையும் போயே போச்!

### ரிஷபம் :



*(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

நிதானமா, பதற்றப்படாம இருங்க. அவசரபுத்தி வேணாம். சூழ்நிலை உங்களுக்குச் சாதகமாவே இருக்கு. பயன்படுத் திக்கறது உங்க புத்திசாலித்தனம். இந்த வாரம் வெளியூர் பயணங்கள் சிலருக்கு இருக்கலாம். வீட்டுல விருந்தாளிங்க நிறையப் பேர் வரலாம்! வயசான பெற்றோர் இருந்தால், அவங்க ஹெல்த்தைக் கொஞ்சம் கவனிங்க. காசு நிறையப் புழங்கற சமயம். அநாவசிய செலவு களைத் தவிர்க்கறது நல்லது.

### மிதுனம் :



*(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

யார், எப்படிப் போனா என்னங்க? உங்களுக்கு டயம் ஓஹோன்னு இருக்கு. எதிர்ப்பு எதுவும் இல் லாம நினைச்சதை சாதிச்சிக்கலாம். வியாபாரத் துல இருக்கறவங்களுக்கு ஏறுமுகமான வாரம் இது. புதிய ஒப்பந்தங்கள் எதும் போட்டா, நல்லா ஒர்க் அவுட் ஆகும். பெண்களுக்குக் கூடுதலா சில நல்ல பலன்கள் தெரியுது. தொட்டதெல் லாம் துலங்கும். அப்புற மென்ன!

### கடகம் :



*(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

அவசரத்துல முடி வெடுத்துட்டு, தப்பாச்சுன்னா பழியை அடுத் தவங்க மேல போடறது தப்புங்க! ரொம்ப நிதானம் முக்கியம். இந்த வாரம் உங்களோட இந்த குணத்தால சில நண்பர்களை இழக்க வேண்டி வரலாம்! தொலைதூரப் பயணங் களைத் தவிர்க்க முடியுமா பாருங்க. காரணம், போற காரியம் பூரணமா நிறை வேறாது. வாரம் முழுக்கவே ஜாக்கிரதையா இருக்க வேண்டியது அவசியம்.

### சிம்மம் :



*(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

கொஞ்சம் பிரச்னை தரும் வாரம்தான். எதிர் பாராத செலவுகளால மனசு சலிப்படையும். அதனால வீட்டுல மனஸ்தாபம் உண்டாகி, இறுக்கம் கவியும். ஷேர், வீடு, நிலம் வாங்கற வேலை இப்ப வேணாம். புதிய முயற்சிகள் எதுவானா லும் கொஞ்சம் தள்ளிப் போட்டா நல்லது.

### கன்னி :



*(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

கொஞ்ச நாளைக்குப் பணப் பிரச்னையே இருக் காது. அதனால மன மகிழ்ச் சிக்குக் குறைவில்லை. வெளியூர்லேருந்து யாராச்சும் சமயத்துல உதவி செய்வாங்க. அது உங்களுக்கு சமயசஞ்சீவியா இருக்கும்! புதிய பொருள்கள் வாங்கறது, கல் யாணம் கூடி வர்றது, உபயோகமான பயணங் கள்னு இந்த வாரம் உங்களுக்குப் பிரமாத மாவே இருக்கும்.



## துலாம் :

*(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

இந்த ராசிக்காரப் பெண்களுக்கு இப்ப நல்ல யோகம். புடைவை, நகை, உல்லாசப் பயணம் அது இதுன்னு திகட்டத் திகட்ட சந்தோஷம். திடீர்னு தெய்வ பக்தி கூடும். ஏதாவது புண்ணிய க்ஷேத்திரத்துக்குப் போயிட்டுவரத் தோணும். நல்ல காரியம்தானே? தாமதமில்லாம செஞ்சிடுங்க. ஒரே ஒரு விஷயம். பயணங்களின் போது ஜாக்கிரதையா நடந்துக்கங்க. விபத்து நடக்கலாம்.



## விருச்சிகம் :

*(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

லாபஸ்தானத்துல உலவற கிரக அமைப்புகள் காரணமா, உங்களுக்குப் பணப் பிரச்னையே வராது. ஷேர்ல காசு போட்டீங்கன்னாக்கூட சீக்கிரம் டபுளாயிடும். புதுசா தொடங்கற காரியங்களை ஒய்ஃப் பேர்ல தொடங்குங்க. ஓஹோன்னு வரும்!



## தனுசு :

*(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

நீண்ட நாளா குழந்தைப் பேறு இல்லாத பெண்களுக்கு இப்ப அதுக்கான வாய்ப்பு கூடி வருது. உத்தியோகஸ்தர்களுக்கு அப்பப்ப பூஸ்ட் மாதிரி பாராட்டு கிடைச்சிட்டே இருக்கும். மனசுக்கு இதமான காரியங்கள் இப்ப நிறைய நடக்கும். சிலருக்கு உத்யோக ரீதில இட மாற்றம் இருக்கலாம். மாறுதல் நல்லதுக்கே!



## மகரம் :

*(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

இந்த வாரம் நீங்க செய்யற எந்தக் காரியத்திலேயும் சின்னச்சின்ன தடங்கல்கள் வரும். ஆனா முடிவு சுபம்தான்னு வெச்சிக்கங்க. எழுத்தாளர்களுக்கும் கட்டட காண்ட்ராக்டர்களுக்கும் இப்ப நல்ல டயம். வீடு மாதிரி அசையா சொத்துக்கள் சேருகிற சமயம் இது. மாணவர்கள் மட்டும் படிப்புல கொஞ்சம் கூடுதலா கவனம் செலுத்த வேண்டியது முக்கியம். பங்கு மார்க்கெட், லாட்டரி மட்டும் இப்ப வேணாம். ஊத்திக்கும்.



## கும்பம் :

*(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

எதிர் நீச்சல் போட வேண்டிய வாரம். வீட்டுல குழப்பமும் சர்ச்சையும் அடிக்கடி உண்டாக நீங்க காரணமா இருப்பீங்க. எதையும் விட்டுக் குடுக்கப் பழகிக்கங்க. உங்களைச் சுத்தி இருக்கறவங்க, உங்க மேல நிறைய அன்பு வெச்சிருக்காங்க. அவங்க மனசு கஷ்டப்படும்படி நடந்துக்கலாமா? ஆபீஸ் போறவங்களுக்குக் கடுமையான வேலைச் சுமை இருக்கும். அவசியமானாலொழிய வெளியூர் எதுக்கும் இப்ப போகாதீங்க.



கன்னி ராசிக்காரரான ஓவியர் மாருதிக்கு இந்த வாரம் பணம் தாராளமா வந்து சேரும். சமயசஞ்சீவியா வெளியூர் நண்பர்கள் யாராவது உதவுவாங்க. பிரமாதமான வாரமா இது இருக்கும்!

## மீனம் :

*(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*



புகழ், கௌரவம் - இதுக்குக் குறைச்சல் இருக்காது. குறிப்பா அரசியல்வாதிகளுக்கு. வெள்ளிக் கிழமைக்கப்புறம் சொத்து எதும் வாங்கற முயற்சி செஞ்சீங்கன்னா சிக்கல் வரலாம். முன்னாலயே செய்யப் பாருங்க. பெண்களுக்கு திடீர் அதிர்ஷ்டங்கள் அடிக்கலாம். அதே மாதிரி திடீர் உடல் நலக் குறைவும் நேரலாம், கவனம். நவக்கிரக வழிபாடு நல்லது செய்யும்.

தாரென்ஸனின் அழைப்புக் கிணங்க அன்று ராத்திரி பேஜ் அவன் வீட்டுக்குப் போனபோது, பிஜா னும் ஆண்டியும் சீட்டு விளையாடிக் கொண்டு, சிரித்து விளையாடிக் கலாட்டா செய்து கொண்டிருந்தார்கள்.

சமையலில் ஈடுபட்டிருந்த தாரென்ஸன், "ஆஸ்பத்திரியில் க்ளோவைப் பார்த்தாயா? எப்படி இருக்கிறாள்?" என்று விசாரித்தான்.

"ரொம்ப நன்றாக இருக்கிறாள். அவளு டைய சினேகிதப் பையன் ஜேமி வந்திருந்தான். பாவம், எல்லாம் தன்னால்தான் என்று மனம் நொந்து போயிருக்கிறான். வருத்தத்துடன் பேசினான்," என்று சொல்லும்போது, எந்த நினைவுமில்லாமல், ஆறுதலுமில்லாமல் ஆஸ்பத்திரியில் தனியே கிடக்கும் ஆலிஸனின் நினைவு ஏற்பட்டு அவள் நெஞ்சை அறுத்தது. "போன வாரம், சொல்லப் போனால் இதே கிழமை, இதே நேரம்... ஆலி என் சிவப்பு ஸ்வெட்டரைக் கேட்டு வாங்கிப் போட்டுக் கொண்டு போனது இப்போது போல்தான் இருக்கிறது. அது எனக்கு ரொம் பப் பிடித்தமான ஸ்வெட்டர். தரவே மாட்டேன் என்றேன்..."

ஆலிஸன் ஆஸ்பத்திரிக்குப் போனவுடனேயே அந்த ஸ்வெட் டரைத் துண்டு துண்டாக வெட் டியெடுக்கும்படி ஆகிவிட்டது. முதல் முறையாக இப்போது தான் அந்த ஸ்வெட்டரைப் பற்றி ஞாபகம் வந்தது பேஜுக்கு.

'ஸ்வெட்டர் எனக்குத் திரும் பக் கிடைக்க வேண்டாம். என் ஆலி திரும்பக் கிடைத்தால் போதும்' என்று எண்ணிக் கொண்டாள்.

சமையலறை மேஜையில் ஆளுக்கொரு கிளாஸ் வைத் துக் கொண்டு அவர்கள் உட் கார்ந்தார்கள். "உன் வேதனை யைக் குறைக்க ஏதாவது செய்ய வேண்டும் போலிருக் கிறது. என்ன செய்வதென்று தான் தெரியவில்லை," என்றான் தாரென்ஸன்.

"நீங்கள் ஏற்கெனவே நிறையச் செய்து விட்டீர் கள்," என்றாள் பேஜ். "என் வாழ்க்கை சீராவதற்கு ரொம்ப நாளாகும் என்று தோன்றுகிறது. இப்போதோ கொஞ்ச நாள் கழித்தோ எப்படியும் பிராட் வீட்டை விட்டு வெளியே போய் விடுவார். அதுதான் கஷ்டம். எனக்குக் கூடப் பரவாயில்லை. ஆண்டிதான் ரொம்பக் கஷ்டப்படுவான்... இன்னொரு பக் கம் ஆலியின் பிரச்னை.... அவள் எப்படிப் பட்ட நிலைமையில் வீட்டுக்கு வரப் போகிறாளோ? அவளை வைத்துக் கொண்டு நான் எப்படிச் சமாளிக்கப் போகிறேனோ..."

தாழ்ந்த குரலில் அவள் புலம்பிக் கொண் டிருந்தாள். ஆலியுடன் வெகு காலத்துக்குப் போராட வேண்டியிருக்கும் என்று அவளுக் குப் புரிந்திருந்தது. ஆனால் வாழ்க்கை இப் படித்தான் இனிமேல் இருக்கப் போகிறது என்ற யதார்த்தத்துக்கு அவள் வந்து விட்டாள். கடந்த ஒரு வாரத்து அனுபவங்கள் அவ ளுக்குப் பலவற்றைக் கற்றுத் தந்திருந்தன. குறிப்பாக, எதை யும் ஏற்றுக் கொள்கிற தைரியத்தையும் பொறு மையையும் கொடுத்திருந்தன.

"பிராட் வீட்டை விட்டுப் போனால் ஆண்டி நொந்து போய்விடுவான் இல்லை?" என்றான் தாரென்ஸன்.

"ரொம்பத்தான் நொந்து போவான்.




மூலம் : டேனியல் ஸ்டீல்
தமிழில் : ரா.கி. ரங்கராஜன்

ஆனால் பிராட் போவாரா போக மாட்டாரா என்பது கேள்வியில்லை. எப்போது போகப் போகிறார் என்பதுதான் கேள்வி."

"சில சமயம் குழந்தைகளுக்கு எதுவும் புரியாது என்று நாம் நினைக்கிறோம். ஆனால் நம்மை விடக் குழந்தைகள்தான அதிகம் புரிந்து வைத்திருக்கிறார்கள், தெரிந்து வைத்திருக்கிறார்கள்."

எல்லாரும் சாப்பிட்டு முடிந்ததும், பிஜான் சமையலறையை ஒழுங்கு படுத்தத் தொடங்கினான். ஆண்டி அவனுக்கு உதவியாக இருக்கவே, பேஜூம் தாரென்ஸனும் வாசல்புறமிருந்த புல்வெளியில் நாற்காலியைப் போட்டுக் கொண்டு அமர்ந்தார்கள்.

குன்றுகளின் பின்னே சூரியன் மறைய, செக்கர் வானம் ஜொலித்துக் கொண்டிருந்தது.

"நீயும் ஆண்டியும் வந்ததில் எனக்கு ரொம்ப சந்தோஷம், பேஜ்," என்றான் அவன்.

"எனக்கும்தான். மனசில் இருக்கிற குழப்பங்களையெல்லாம் மறந்து விட்டுக் கொஞ்ச நேரம் உற்சாகமாக இருக்க முடிந்தது."

"குழப்பங்கள் அதிக நாளைக்கு நீடிக்காது. கவலைப்படாதே" என்ற தாரென்ஸன் அவள் கைகளைத் தன் கைகளோடு சேர்த்துப் பிடித்துக் கொண்டு அழுத்தினான். அதற்கு மேல் ஏதேனும் செய்யப் போய் அவள் பயந்து விடுவாளோ என்று தோன்றியது. இருந்தாலும் அவளுக்குப் பாதுகாப்புக் கொடுக்கவே அவன் மனம் விரும்பியது. "வாழ்க்கை ரொம்பச் சுலபமாக அமைந்து விட்டது என்று நினைக்கிறோம். எல்லாவற்றையும் சரிபண்ணி விட்டோம், இனிமேல் எந்தப் பிரச்னையும் இடையாது என்று நினைக்கிறோம். திடீரென்று ஒரு நாள் எல்லாம் உடைந்து சிதறல்களாகி விடுகிறது. ஆனால் ஒன்று. உடைந்





'ACCIDENT' என்ற ஆங்கில நாவலின் தமிழ் வடிவம். © டேனியல் ஸ்டீல்

தையெல்லாம் திரட்டி ஒட்டி வைத்த பிறகு பார்த்தால், முன்னை விட நன்றாயிருக்கிறது. அதுதான் ஆறுதலான விஷயம்."

பேஜ் அவன் முகத்தையே பார்த்த வண்ணம் இருந்தாள். அவனுடைய வார்த்தைகளும் வாழ்க்கைத் தத்துவமும், கண்ணியமான நேர்மையான போக்கும் அவளை நெகிழ்வித்தன.

"என்னையே எடுத்துக் கொள். முன்னைக் காட்டிலும் எவ்வளவோ சந்தோஷமாக இருக்கிறேன். இன்னொரு கல்யாணம் செய்து கொண்டு, குழந்தைகள் பெற்றுக் கொள்ளக் கூட ஆசைதான். சரியான பெண் வரட்டுமென்று காத்திருக்கிறேன். இப்போதைக்கு என் குழந்தைகள், என் வேலை - இதுவே எனக்கு ஆனந்தமாக இருக்கிறது. வாழ்க்கையை நான் நேசிக்கிறேன். வெகு சீக்கிரத்தில் உன் வாழ்க்கையும் நிம்மதியாக, சந்தோஷமாக ஆகிவிடும். நீ திறமைசாலி. அருமையான பெண். பிரமாதமான குழந்தைகள் இருக்கிறார்கள். எவ்வளவோ மகிழ்ச்சியுடன் இருக்க உனக்கு உரிமை இருக்கிறது. உன் வாழ்க்கையில் ஆண் துணை இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, நீ ஜம்மென்று இருக்கத்தான் போகிறாய்."

அவன் பேசப் பேச அவனையே வெகு நேரம் நோக்கியவாறிருந்தாள் அவள்.

அவன் அவளை நோக்கிக் குனிந்தான். முத்தமிடப் போகிறான் என்று பேஜ் நினைத்த சமயம், தடதடவென்று ஓடி வந்து விட்டார்கள் பிஜானும் ஆண்டியும்.

"நாங்கள் பேஸ்பால் விளையாட வெளியே போகலாமா, அம்மா?" என்றான் ஆண்டி.

"சே, சே. வீட்டுக்குப் போக நேரமாகி விட்டது. கொஞ்ச நேரம் உள்ளே போய் இரண்டு பேரும் டீவி பார்த்துக் கொண்டிருங்கள். நான் வந்து கூப்பிடுகிறேன்," என்று சொல்லி இருவரையும் திருப்பி அனுப்பி விட்டான் பேஜ்.

இரவுக் காற்று சுகமாக வீசியது. பேஜும் தாரென்ஸனும் மௌனமாக, ஒருவரையொருவர் புரிந்து கொண்டவர்களாக அருகருகே உட்கார்ந்திருந்தார்கள். தாரென்ஸன் மீண்டும் அவளைத் தொடவோ நெருங்கவோ முயலவில்லை.

ஆண்டியுடன் வீடு திரும்பிக் கொண்டிருந்தபோது பேஜின் எண்ணங்கள் தாரென்ஸனைச் சுற்றியே வந்தன. அவன் தன்னை நோக்கிக் குனிந்தானே, அது முத்தமிடுவதற்காகவா? அல்லது நாமாக அப்படிக் கற்பனை செய்து கொண்டோமா? யோசித்துப் பார்த்த போது கற்பனைதான் என்று தோன்றியது. சுதந்திரமாக வாழ்கிறவர்... குழந்தைகளுடன் சந்தோஷமாக இருக்கிறார்... வாழ்க்கைத் துணைக்கு ஒரு பெண் தேவை என்று நினைக்காமலே இருக்கிறார்... முன்பொரு முறை தாரென்ஸனைப் பற்றிப் பேச்சு வந்த போது, ஆலிஸன், 'அவர் பெண்களோடு வெளியே போவதே கிடையாதம்மா. எந்தப் பெண்ணும் அவருக்குச் சிநேகிதமில்லை' என்று சொன்னது நினைவு வந்தது. அது உண்மை தான் போலிருக்கிறது. அவர் மனைவி டானா பெண்களைப் பற்றி அப்படியொரு வெறுப்பு ஏற்படுத்தியிருக்கிறாள் அவர் மனசில்...

"என்னம்மா, நான் கேட்டுக்கிட்டே இருக்கிறேன், பதில் சொல்ல மாட்டேங்கறியே?" என்று பின் சீட்டிலிருந்து ஆண்டி கேட்ட பிறகுதான் அவள் விழித்துக் கொண்டாள்.

"என்ன ஆண்டி, என்ன கேட்டாய்?"

"ஸ்டிபானிங்கிறது யார் என்று கேட்டேன்?"

திக்கென்றது அவளுக்கு. "என்ன சொல்கிறாய் 'நீ?"

"ஸ்டிபானின்னு யாரையோ பத்தி அப்பா கிட்டே கத்திட்டிருந்தியே அன்னைக்கு? அப்புறம் அப்பா அவள்கிட்டே டெலிபோனில் பேசிட்டிருந்ததையும் கேட்டேன். யார் அந்த ஸ்டிபானி?" என்றான் ஆண்டி.

குரலைச் சாதாரணமாக வைத்துக் கொண்டு, "அப்பாவோட ஆபீசில் வேலை செய்கிற பெண் போலிருக்கு," என்றாள். தாரென்ஸன் சொன்னது சரிதான். நாம் நினைத்திருப்பதை விட அதிகமாகவே குழந்தைகளுக்குத் தெரிந்திருக்கிறது.

"அவள் பெண்ணாம்மா?" என்றான் ஆண்டி மறுபடி.

"எனக்கு அவளைத் தெரியாது."

"பின்னே ஏன் அவளைப் பத்தி அப்பா விடம் சண்டை போட்டே?"

பேஜுக்குக் கோபம் வந்தது. "நான் சண்டை எதுவும் போடவில்லை. கம்மென்றிரு. நீ



"திருடப் போன இடத்துல எப்படி மாட்டிக் கிட்டீங்க, அண்ணே!"

"அதையேன் கேட்கிற; திருடப் போன வீட்டுக்காரருக்குக் காது கேட்காததால சத்தம் போட்டு பீரோ சாவி கேட்கும்படி ஆயிடுச்சு!"

— காழி ஆர். சீதாராமன்

அவளைப் பற்றிப் பேசுவது எனக்குப் பிடிக்கவில்லை."

"ஏம்மா பிடிக்கலை? போனில் என்னிடம் பிரியமாய்த்தானே பேசினாள்?"

பேஜ் திடுக்கிட்டாள். "பேசினாளா? எப்போது?"

"நீ ஆஸ்பத்திரிக்குப் போயிருந்தியே, அப்போ," என்றான் ஆண்டி. "அப்பாவைக் கூப்பிட்டாள். இல்லையென்று சொன்னேன். வந்ததும் நான் கூப்பிட்டேன்னு சொல்லுன்னாள். நான் சொல்ல மறந்திட்டேன். அப்பா கோபிச்சுப்பாராம்மா?"

அதற்கு ஏதும் பதில் சொல்லாமல் அவனை உள்ளே அழைத்துச் சென்று உடை மாற்றிப் படுக்க வைத்தாள்.

"என் மேலே உனக்குக் கோபமா அம்மா?" என்றான் ஆண்டி.

"சீ, சீ. உன் மேலே எனக்கென்ன கோபம்?" என்றாள் பேஜ். உண்மையிலேயே, இவன் அப்பாவின் தப்புக்காக இவனை எப்படிக் கோபிக்க முடியும்? "உன் மேலே எனக்கு எந்தக் கோபமும் இல்லைடா, கண்ணா. களைப்பாயிருக்கிறது. அவ்வளவுதான்," என்றாள்.

"போம்மா. ஆலி ஆஸ்பத்திரிக்குப் போனதிலேயிருந்து நீ எப்பவும் களைப்பாய்த்தான் இருக்கிறே."

"என்னடா கண்ணா செய்யட்டும்? நம் எல்லாருக்குமே கஷ்டமாய்த்தான் இருக்கிறது."

"அப்பா மேலே உனக்குக் கோபமா?"

"சில சமயங்களில் கோபம் வருகிறது... ஆலியின் உடம்பைப் பற்றி எல்லாருக்கும் கவலை."

"ஸ்டிபானி மேலே கோபமா?" என்றான் ஆண்டி. எதையோ புரிந்து கொள்ள வேண்டுமென்று அவன் முயல்வது பேஜுக்குத் தெரிந்தது.

ஒரு பெருமூச்சுடன், "ஸ்டிபானியிடம் கோபமா? எனக்கு அவளைத் தெரியவே தெரியாதே!" என்றாள்.

நிஜத்தில், ஸ்டிபானியிடம் அவளுக்குக் கோபம் ஏற்படவில்லை. கோபமெல்லாம் பிராடிடம்தான். அவளை ஏமாற்றியவன் அவன்தான். பொய் சொன்னவன் அவன்தான். வாழ்க்கையை நாசம் செய்தவன் அவன்தான்.

எல்லாத் தப்பும் பிராடினுடையது. அவனுடைய கள்ளக் காதலி ஸ்டிபானியினுடையது அல்ல.

"அம்மா, எனக்கு பிஜானை ரொம்பப் பிடிச்சிருக்கு, அம்மா. என் சினேகிதன்களிலேயே அவன்தான் வயசில் ரொம்பப் பெரியவன். பதினெட்டு வயதாகிறது. எனக்கு அவன் ஸ்பெஷல் ஃப்ரண்ட்."



"என்னங்க! கோடி வீட்டு கோமளா மாமி கிட்ட போய் கொஞ்ச நேரம் பேசிட்டு வந்துடறேங்க!"

"சரி சரி போயிட்டு வா. அடிக்கடி லெட்டர் போடு."

— தக்கோலம் அன்புமணி

"அவன் உனக்கு ஸ்பெஷல். நீ எனக்கு ஸ்பெஷல்," என்று சொல்லிக் குழந்தையை அணைத்துக் கொண்டாள். ஆனால் அவளுக்கு வெகு நேரம் வரை தூக்கம் வரவில்லை.

அடுத்த நாள் இரவு எதிர்பாராதவிதமாக பிராட் வீட்டிற்கு வந்தான். ஒப்புக்கு இரண்டு வார்த்தை ஆண்டியுடன் பேசிவிட்டு, சாப்பிட்டான்.

இரவு அவன் தங்கப் போகிறானென்று நினைத்திருந்த பேஜ், துணிமணிகளை சூட்கேசில் அவன் எடுத்து வைத்துக் கொள்வதைப் பார்த்து ஆச்சரியப்பட்டாள்.

"வெளியூர் போகப் போகிறீர்களா?" என்றதற்கு, "ஆமாம். சிகாகோவுக்குப் போக வேண்டியிருக்கிறது. பிஸினஸ்," என்றான் சுருக்கமாக.

"ஆலி இப்படி உயிரோடு போராடிக் கொண்டிருக்கும்போது வெளியூர் போகாவிட்டால் என்ன?"

"போகத்தான் வேண்டும். சிகாகோவில் ஒரு முக்கியமான வேலை."

"நிஜமாகவா அல்லது அன்றைக்கு க்ளீவ்லந்துக்குப் போன மாதிரியா?"

"மறுபடி ஆரம்பிக்காதே, பேஜ். நான் உண்மையைத்தான் சொல்கிறேன்."

"நானும் உண்மையாகத்தான் கேட்கிறேன்," என்று அவள் சொன்னதைப் பொருட்படுத்தாமல் அவன் புறப்பட்டு விட்டான்.

ஸ்டிபானியுடன்தான் அவன் வெளியூர் போகிறான் என்பது புரிந்ததால் பேஜுக்கு அது அதிர்ச்சியாக இருக்கவில்லை.

ஆனால் மறுநாள் ஆஸ்பத்திரியில் ஆலிஸனுக்கு அருகே உட்கார்ந்திருந்தபோது அதிர்ச்சி ஏற்பட்டது.

இம்முறை ஆண்டியைப் பற்றி.

(தொடரும்)

# கொலு பார்க்கலையோ கொலு!




பதினாலாவது வயதில் பேப்பர் போடும் பையனாக வாழ்க்கையைத் துவங்கினார் கிம் ஊ சுங். இந்தக் கொரியர் ஆரம்பத்தி லேயே பேப்பர் போடுகிற மற்ற பையன்களுடன் போட்டி போட வேண்டி யிருப்பதை உணர்ந்தார். முதல் நாளே சில்லறை தயார் செய்து கொண்டு நோட்டு தருவோருக்கு தாமதமின்றி பாக்கி தந்து விட்டு அடுத்த வாடிக்கை யாளரைப் பிடிக்க ஓடினார். கடைகளுக்கு முதலில் பேப்பர் சப்ளை செய்து விட்டு, இரண்டாவது தடவை சுற்றி வந்து பணம் வசூலித்தார். இவர் வேகத் துக்கு ஈடுகொடுக்க முடி யாமல் பேப்பர் போடும் மற்ற பையன்கள் அந்த வட்டாரத்தையே இவருக்கு விட்டுக் கொடுத்துவிட்டு ஒதுங்கினார்கள்! இந்த வாலிபர்தான் பின் நாட் களில் டாவூ கம்பெனியை நிறுவி, ஸியலோ கார்களைத் தயாரித்து உலகெங்கும் விற்பனை செய்தவர்!

— கோவி. இராஜேந்திரன்




# பே

பேருந்துப் பயணத்தில் தொடர்ந்து ஒருவர் புகை பிடித்துக் கொண்டே வந்தார். அருகே பின்புறம் அமர்ந்திருந்தவருக்கோ அது பிடிக்கவில்லை.

கண்டக்டரும், மற்ற பயணிகளும் புகை பிடிப்பவரின் பயில்வான் தோற்றத்தைப் பார்த்து 'நமக்கேன் வம்பு' என பேசாமல் இருந்து விட்டனர். பின்புறம் அமர்ந்து வந்தவர் புகைப் பிரியரிடம், 'இதுவரை எத்தனை சிகரெட் பிடித்தீர்கள்?' என வினவ, அதற்கு அவர் அலட்சியமாக, 'பத்து இருக்கும்' என்றார். 'அவற்றின் விலை என்ன' என இவர் மீண்டும் கேட்க, அவர் 'ஆறு ரூபாய்' என்றார். உடனே பின் சீட்காரர் புகைப்பிரியரிடம் மூன்று ரூபாயை நீட்டி, 'வாங்கிக்கங்க. நீங்க பிடிச்ச சிகரெட்டின் பாதிப் புகை எனக்குத்தான் கிடைச்சுது!' என்றார். புகைப்பிரியர் முகத்தில் அசடு அழகாய் வழிந்தது.

தகவல் : எல். எம். மங்கை

# புயலுக்கு முந்தைய அமைதி!





மன்மோகன் சிங் காட்டிய பாதையில்தான் சிதம்பரம் தொடர்ந்து கொண்டிருக்கிறார். ஆனால், சிங் காலத்திய பெரும்பான்மை அரசுக்குக் கிடைத்த வெற்றிகள் இன்றைய ஐ.மு. ஆட்சிக்குக் கிட்டவில்லை.

ஒரு நாட்டின் நிதியமைச்சராய் இருப்பதென்பது இலேசுபட்ட காரியமில்லை. அதிலும் இந்தியா போன்ற வளரும் நாடு; அதிலும் நேரெதிரான கொள்கைகளுடைய கட்சிகள் கொண்ட ஒரு கூட்டணி அரசு; அதன் அமைச்சரவையில் நிதியமைச்சராயிருப்பது முள் கிரீடம் அணிகிற கௌரவம்தான்! சாண் ஏறினால் முழம் சறுக்கும். அனைவரது விமர்சனங்களுக்கும் ஆளாக நேரும்!

சமீபத்தில் நமது நிதியமைச்சர் இவ்வாறு கடுமையான விமர்சனம் பெற்றிருப்பது மன்மோகன் சிங்கிடமிருந்து! முன்னாள் நிதியமைச்சர் ம.மோ. சிங்தான் பொருளாதார சீர்திருத்தங்களின் பிதாமகர் என்பதால், அவருடைய விமர்சனம் மிகுந்த முக்கியத்துவம் பெறுகிறது. அவர் காட்டிய பாதையில்தான் சிதம்பரம் தொடர்ந்து கொண்டிருக்கிறார். ஆனால், சிங் காலத்திய பெரும்பான்மை அரசுக்குக் கிடைத்த வெற்றிகள் இன்றைய ஐ.மு. ஆட்சிக்குக் கிட்டவில்லை. கடந்த ஆண்டு பருவ மழை பொய்க்காமல் காத்ததால் விவசாய உற்பத்தி மட்டும் திருப்திகரமாக இருக்கிறது. ஆனால் நாட்டின் ஒட்டுமொத்த பொருளாதாரம் - தொழில், வர்த்தகம் - அங்குலம் கூட முன்னேறவில்லை.

இந்தச் சூழ்நிலையில்தான் அரசு ஊழியர் சம்பள உயர்வை ஈடுகட்ட அரசு சேவைகளுக்கான கட்டணங்கள் (ரயில், தபால், டெலிபோன்) ஏற்றப்படுவதற்கான அறிகுறிகளைப் பார்க்கிறோம். மத்திய அரசு இவ்வாறு தனது செலவுகளைச் சமாளிக்க முயன்று கொண்டிருக்கும்போதே மாநில அரசுகள் தாங்கள் சந்திக்கவிருக்கும் கூடுதல் செலவுகளுக்காக (சம்பள உயர்வு) மத்திய அரசிடம் கையேந்துகின்றன.

அரசாங்கம் பதற்றத்துடன் பரபரப்பாகச் செயல்பட்டாலும் நாட்டின் பொருளாதாரம் ஆட்டி வைத்த எண்ணெய்க் குடமாக அப்படியே அசையாமல் நிற்கிறது.

அரசின் முயற்சிகள் எல்லாமே Law of Diminishing Returns என்கிற பொருளாதாரக் கோட்பாடுபடி காரியங்கள் நடக்கத்தான் வழிவகுக்கின்றன.

எடுக்கிற முயற்சிக்கு நேர் விரோதமான பலன்கள் கிடைக்கும் என்பதைச் சுட்டிக் காட்டுவதே Law of Diminishing Returns. அதாவது முயற்சி அதிகரிக்க அதிகரிக்க பலன் குறையும்! இந்தக் கோட்பாடு செயல்பட ஆரம்பித்து விட்டால் அதைப் பின்னுக்குத் தள்ளி நாட்டை மீண்டும் முன்னேற்றப் பாதையில் திருப்பிவிடுவது பிரும்ம பிரயத்தனமாக இருக்கும்.

புயலுக்கு முந்தைய அமைதியாக இந்தியப் பொருளாதாரம் தூங்கிக் கொண்டிருக்கிறது!

— வி. கோபாலன்

பொம்மைபோல் முடங்கிப் போவதும் குறைவான நடமாட்டமும் முதுமைச் சின்னங்கள். அவற்றைத் தூக்கியெறியுங்கள். இளமை இதோ இதோ...



"இரு மாதங்களுக்கு முன் ஓய்வு பெற்ற அரசு ஊழியர் ஒருவர் என்னிடம் வந்தார். தாம் காய்ச்சலால் சமீபத்தில் பாதிக்கப்பட்டதாகவும், அதற்குப் பிறகு மிகவும் மனச்சோர்வாக (டிப்ரஷன்) உணர்வதாகவும் அவர் கூறினார். பேசிப் பார்த்ததில் ஒன்று புரிந்தது. அந்தக் காய்ச்சல் என்பது பாரம் ஏற்றப்பட்ட ஒட்டகத்தின் முதுகில் வைக்கப்பட்ட 'கடைசி வைக்கோல்.' அவ்வளவுதான். அவருடைய மனச்சிக்கல் 'தாம் ஓய்வு பெற்று விட்டோமே. இனி பயனில்லாதவனாகி விட்டோமே' என்ற காரணத்தினால்தான் உருவாகியிருந்தது. 'இந்த உலகத்தில் யாருமே பயனில்லாதவர்கள் அல்ல. வீட்டில் இல்லை யென்றாலும் வெளியே உங்கள் உதவிகளையும், நல்ல ஆலோசனைகளையும் நன்றியுடன் ஏற்றுக் கொள்ள பலர் இருக்கிறார்கள்' என்று விளக்கியதும் ஒரு துள்ளலான மிடுக்குடன் அவர் சென்றார். அப்போதே தெரிந்துவிட்டது அவருடைய மனச் சோர்வு இனி கொஞ்சம் கொஞ்சமாக நீங்கிவிடும் என்று!"- இப்படி ஆரம்பித்து, எப்படி ஓய்வு பெற்ற வயதானவர்களும் இளைஞர்களைப் போல் இருக்க முடியும் என்பதை விளக்க ஆரம்பித்தார் மனநல மருத்துவர் டாக்டர் பாலன்.

# சுறுசுறுப்பாகச் செயல்படுங்கள்; இளமை தானாக வரும்!

"வயதாக ஆக மனப்பக்குவமும், விவேகமும் அதிகரிக்கும் (அல்லது அதிகரிக்க வேண்டும்) என்பது உண்மைதான். ஆனால் இளமை உணர்வை இழக்காமல் இருக்க வேண்டுமானால் எந்த வயதிலும் வேகத்தை இழக்கக் கூடாது. சொல்லப் போனால் அதுவரை கொஞ்சம் தாமதமாகவே எதையும் செய்யப் பழக்கப் படுத்திக் கொண்டவர்கள்கூட, நடுத்தர வயதை எட்டியவுடன் சுறுசுறுப்பைக் கூட்டிக் கொள்ள வேண்டும்.

"வேகம் என்பது இளமையோடு பெரிதும் தொடர்பு கொண்டது. அது காட்டாற்று வெள்ளமாகவோ, மடை திறந்த வெள்ளமாகவோ இருக்க வேண்டியதில்லை. அதே சமயம் சோம்பேறித்தனமும், வயதை ஒரு சலுகையாகப் பயன்படுத்தி முடங்கிவிடும் போக்கும் கண்டிப்பாக இருக்கக் கூடாது.



"மாணவர்களிடம் என்னை உங்க நண்பனா நினைச்சுக்குங் கன்னு சொன்னது தப்பாப்போச்சு!"

"ஏன்?"

"ஒரு மாணவன் என்னிடமே கிளாஸ கட் பண்ணிட்டு வாங்க சார்; சினிமாவுக்குப் போகலாம்னு கூப்பிடுறான்!"

– எம். கருணாகரன்



## இளமைப் போட்டி - 9

இந்தவார இளமையின் சுறுசுறுப் போட்டி, தமிழகத்தில் 90 வயதிற்குமேல் வாழ்ந்து மறைந்த இரண்டு பேர், எதிரெதிர் கருத்துகளைக் கொண்டிருந்தாலும் நல்ல நண்பர்களாகத் திகழ்ந்தார்கள். அந்த இருவர் யார்? ஒரு சின்னக் குறிப்பு: இருவருமே அரசியல் தொடர்புடையவர்கள்.

பன்னிரண்டாவது போட்டி முடிவில் கூப்பன் வரும். பன்னிரண்டு விடைகளையும் அதில் எழுதி அனுப்புங்கள். பரிசு நிச்சயம் உண்டு!

செய்யும் செயல்களில் ஒரு வேகம் இருந்தால் இளமையைத் தாண்டியவர்களுக்கூட இளமை உணர்வைத் தொடர்ந்து பெறலாம். சுற்றி விறுவிறுப்பாகவும் ஒரு சுறுசுறுப்பான இளைஞரோடு இருப்பதாகவே உணர்வார்கள்.

"வயதானவர்கள் உடற்பயிற்சி செய்வதும், வேகத்துடன் செயல்படுவதும் ரொம்ப நல்லது. இதனால் உடலில் பீட்டா - எண்டார்பின் என்ற ஹார்மோன் அதிகம் சுரக்கிறது. செயற்கையாக உற்பத்தி செய்ய முடியாத இந்த ஹார்மோனுக்கு ஒரு தனி சக்தி உண்டு. இது உற்சாகத்தை அளிக்கக் கூடியது. உற்சாகமாக இருப்பவர்களிடம் இளமை உணர்வு தானாகவே நிறைந்து விடும்!

"உற்சாகமும் வேகமுமான வாழ்க்கை முறை என்றால் காரை அதிவேகமாக ஓட்டுவது, இரண்டு படிகளுக்கு ஒன்று என்று காலை வைத்து தாவிச் செல்வது, யோசிக்காமல் நடவடிக்கையாகச் செயல்படுவது என்பதல்ல. இன்று செய்ய வேண்டியதை இன்றே முடிப்பது, விடா முயற்சி, 'நம்மால் முடியுமா?' என்ற தயக்கத்தைத் தூர எறிவது- இவையெல்லாம் வேகத்தின் அடையாளச் சின்னங்கள்தான்.

"இப்படி ஒரு பெரியவரைக் கற்பனை செய்து பாருங்கள். எந்த வேலையையும் நாளைக்கு என்று தள்ளிப் போடாதவர். எதையாவது வாங்க வேண்டுமா, ஏதாவது வீட்டில் போடுகள் இருந்தாலும், தாமே விறுவிறுவென்று கடைக்குப் போய், நடையாக நடப்பவர். தன் சாமான்கள் சிதறி கலைந்திருந்தாலும் உடனே அவற்றை ஒழுங்குபடுத்தி வைப்பவர். தமது தினசரி வாழ்க்கையில் வேகம் காட்டுபவர். அதே சமயம் பரபரப்பு என்ற பேரில் தப்பும் தவறுமாக எதையும் செய்துவிட்டு பிரச்னையில் சிக்கிக் கொள்ளாதவர்; இதன் காரணமாக மற்றவர்களை டென்ஷனாக்காமல் இருப்பவர். இந்தப் பெரிய இளைஞராக நீங்கள் ஏன் இருக்கக் கூடாது?

"முயற்சி செய்யுங்கள்; நிச்சயம் இளமைக்குத் திரும்பி விடுவீர்கள்!"

— அருண் சரண்யா

"ஆனாலும் அந்த ஆளுக்கு கிண்டல் ரொம்ப ஜாஸ்தி...!"

"ஏன் என்ன பண்ணினார்?"

"அவர் குடித்த 'செக்' 'ரிடர்ன்' ஆயிடுச்சுன்னு சொன்னா, 'மெனி ஹேப்பி ரிடர்ன்ஸ்'னு சொல்லிட்டுப் போறார்...!"

— ஜெயாப்ரியன்

அலுவலகம்

தூங்கும் புலியை எழுப்புவது - கொலைக்குச் சமம்!

நாடு எவ்வளவு தூரத்துக்கு முன்னே நிற்குது பாருங்க!

கருத்து : சீர்காழி வி. ரேவதி

# வித்தியாசத்தை நிரூபித்து விட்டீர்கள்!

✉ சட்டமும், தண்டனையும் சாதாரண மக்களுக்குத்தான். அரசியல்வாதிகளுக்கு அல்ல என்கிற நிலைதான் இங்கு தொடர்கிறது. ஊழல் குற்றச்சாட்டு சுமத்தப்பட்ட அரசியல்வாதிகள் நியாயமாய் தண்டனை அடைந்ததாக இங்கு சரித்திரமே இல்லை. காரணம், நமது அரசியலும், அரசியல்வாதிகளும்தான். உமது தெளிவான தலையங்கத்தைப் படிக்கையில், ஆதங்கப்படத்தான் முடிகிறது.

சேலம் – 1, கே. ராஜுபாலு.

✉ சினிமா மார்க்கெட் 'டல்'லானதும் அரசியலை ஒரு கை பார்க்கிற நடிகைகளிடையே, வாயில்லா ஜீவன்களின் நலனில் அக்கறை கொண்டு குரல் கொடுக்கும் அமலா நிச்சயமாக வித்தியாசமானவர்; பாராட்டுக்குரியவர்.

தூத்துக்குடி, ப. சுகுமார்.

✉ 'அறுவைச் சிகிச்சையால் என்றுமே டாக்டருக்கு வலி கிடையாது' என்ற தராசின் பதில் அருமை. சிரிக்க மட்டுமல்ல; வேதனையான இச்சூழலில் சிந்திக்கவும் வைத்து விட்டது.

அரவக்குறிச்சிப்பட்டி, எம். அசோக்ராஜா.

✉ 'அன்னை தெரசாவுக்கு அடுத்தபடியாக அன்னை ஜெயலலிதா' என்ற பதிலை படித்து நொந்து நூலாயிட்டோம்! ஆண்டவன் உம்மை மன்னிப்பாராக!

மயிலாடுதுறை, ஜெ. ரஜினி ராம்கி.

✉ நீங்கள் தந்த வீட்டுக் குறிப்புகள் மிகவும் பயனுள்ள குறிப்புகள். தொடர்ந்து இது மாதிரி குறிப்புகளை வெளியிடுங்கள்.

தூத்துக்குடி, எஸ். ராமசுப்பிரமணியன்.

✉ உபயோகித்த கொசு விரட்டி வில்லைகளைக் கொளுத்தி, புகை கிளப்பி, கொசுக்களை விரட்டலாம் என்று ஒரு வீட்டுக் குறிப்பு வெளியாகியிருந்தது. இது ஆபத்தானது. மிகச் சிறிய அளவில், சீராக கெமிகல் வாயுவை வெளிப்படுத்தும்விதமாகக் கணித்து மின்சாதனம் அமைக்கப்பட்டிருக்கிறது. அதுவே நாளடைவில் சுவாச உறுப்புகளைப் பாதிக்கும் என்று கூறப்படுகிறது. இந்த நிலையில்– உபயோகித்த வில்லைகளானாலும் நெருப்பால் பொங்கி எழுந்து படரும் புகை பெருந்தீங்கை விளைவிக்கக்கூடும்.

சிட்லபாக்கம், அ. ஷண்முகசுந்தரம்.

✉ வி.எஸ். நாகராஜனின், 'பொன்விழா காங்கிரஸ்' போட்டிக் கதையைப் படித்து முடித்ததே தெரியவில்லை. அவ்வளவு சரளமான எழுத்து. சி.பி.ஐ. அதிகாரியையே ஏமாற்றக்கூடிய அளவுக்கு... போலி காங்கிரஸ்காரரா? முடிவை தீர்ணிக்க முடியவில்லை.

திருச்சி – 14, ராஜிராதா.

✉ 'காவிரியில் நாணா' சிறுகதை ஸ்ரீரங்கத்தையும் காவிரிக் கரையையும் வலம்வந்த இனிய உணர்வை ஏற்படுத்தியது... நாணாவின் 'மல்லிகைக் காதல்' நிறைவேறாமல்போன கதையின் கடைசி வரிகள் மனதில் பிசைவு தோன்றச் செய்தன. கதையின் முடிவைக் கண்ணீருடன் படிக்கச் செய்த 'கிருஷ்ணா' பாராட்டிற்குரியவர்.

வலையப்பட்டி, எம். பாலசுப்பிரமணியன்.

✉ தங்கபாலுவைத் தாக்கி வாழப்பாடியோ, வாழப்பாடியைத் தாக்கி தங்கபாலுவோ அறிக்கைப் போர் நடத்திப் பயனில்லை. ஏனென்றால் இந்த இருவருமே சேர்ந்து, பிராண வாயு செலுத்த முயன்றால் கூட, கடும் நோயாளியாகி விட்ட தமிழக காங்கிரஸ் தேறி வருமா என்பது பெருத்த சந்தேகம்.

கும்பகோணம், எஸ். கே. மூர்த்தி.

✉ பாதிக்கப்பட்ட விஜியைப் பேட்டி காணாது, பாதித்த நோய் பற்றி பிறிதொரு மருத்துவருடனான நேர்காணல் மற்ற பத்திரிகைகளிலிருந்து, தான் வித்தியாசமானதொரு வார இதழ் என்பதை நிரூபித்துள்ளது கல்கி!

நெய்வேலி – 3, எஸ். ஸ்ரீக்காந்த்.

✉ 'விஜிக்கு வந்த வியாதி என்ன...?' என்கிற கட்டுரையில் எனது கருத்துக்களை வெளியிட்டிருக்கிறீர்கள். முதுகுத் தண்டு உபாதைகளுக்கான (prolapse of the disc) அறுவை சிகிச்சைகளை மேலைநாடுகளில் செய்து கொள்வதுதான் நல்லது என்பது போல் அக்கட்டுரை தொனிக்கிறது. உண்மை அதுவல்ல. நமது இந்திய அறுவை சிகிச்சை நிபுணர்கள் இத்தகைய பல ஆபரேஷன்களை வெற்றிகரமாகச் செய்து காட்டியிருக்கிறார்கள். இந்த ஆபரேஷன் செய்துகொள்ள மேலை நாட்டுக்குத்தான் போக வேண்டும் என்கிற கட்டாயமில்லை.

பிற சிகிச்சை முறைகள் பலனளிக்காது என்பதை உறுதியாகத் தெரிந்து கொண்ட பிறகே ஆபரேஷன் செய்வது குறித்து முடிவெடுக்க வேண்டும் என்பதையும் வலியுறுத்த விரும்புகிறேன்.

தேவகி மருத்துவமனை, சென்னை – 4.
டாக்டர். ஏ. சொக்கலிங்கம்



வண்ணப்படம் : யோகா



---


Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi

Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.

Telephones : Editorial : 2345624; Circulation Manager : 2345623; Subscription and Advertisement : 2345622; Chief Administrative Officer : 2345621

Annual Subscription : India Rs. 208/-; Overseas Rs. 1200/- (Air Mail)

Half Yearly Subscription : India Rs. 104/-; Overseas Rs. 600/- (Air Mail)


என்றும் ஒளிவீசிடும் எழில்மிகு படைப்பு - அது
என்டைஸ் தரும் தனிச்சிறப்பு
என்டைஸ் தீபாவளி கலெக்ஷன்.
ஒவ்வொன்றும் வண்ணத்தில் நெய்த
வாழ்த்துக் கவிதை. உங்களுக்காக.
உங்கள் குடும்பத்திற்காக.
10% தள்ளுபடி
15.09.97 முதல்
29.10.97 வரை
என்டைஸ்
சிறந்த துணி ரகங்கள், சரியான விலை
நேஷனல்
டெக்ஸ்டைல்
கார்ப்பொரேஷன்

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN/MS (S) M4392/97 * Licensed to post without prepayment under PMG's Licence No. TN / MS/ (S) 161 * Registered as a Newspaper in Srilanka